ரா.கி.ரங்கராஜன்

# ஆண்கள் செவ்வாய் பெண்கள் வெள்ளி

கணவன்-மனைவி சந்தோஷமாக வாழ
ஒரு மனோ தத்துவ நூல்

# ஆண்கள் செவ்வாய் பெண்கள் வெள்ளி

(கணவன் - மனைவி சந்தோஷமாக வாழ்ந்திட
ஒரு மனோதத்துவ நூல்! ஒவ்வொரு குடும்பத்திற்கும்
அவசியமானது. படித்துப் பாருங்கள் - உணர்வீர்கள்)


**ரா.கி. ரங்கராஜன்**
( பல்லாண்டுகள் 'குமுதம்' இணையாசிரியர் )






**நர்மதா பதிப்பகம்**
நல்ல நூல் வெளியீட்டாளர்கள்
10, நானா தெரு, (திநகர் தலைமை
அஞ்சலகத்தை ஒட்டிய தெரு), பாண்டிபஜார்,
திநகர், சென்னை - 600 017. தொலைபேசி: 24 33 43 97

## வாசகர்களுக்கு

நல்ல நூல்களுக்காகத் தரப்படும் தொகை செலவல்ல, மூலதனம்! நமது சிறப்பான எதிர்கால வாழ்வுக்காகத் தரப்படும் Investment! ஐம்பது ரூபாய் புத்தகத்தில் ஆயுட்கால வாழ்க்கைக்கான யோசனைகள் நிறைந் திருக்கும்.

**பொழுதுபோக்கு, கேளிக்கைகளுக்காக செலவிடப்படும் தொகையில் சிறு பகுதியையாவது பயன் தரும் புத்தகங் களுக்காக செலவிடுங்கள். மிகுந்த நன்மை பெறுவீர்கள்!**

**☐ எங்களது இலவச விலைப்பட்டியலைப் பெற 50 காசு அஞ்சலட்டை மட்டும் எழுதுங்கள். உடன் எங்கள் செலவிலேயே அனுப்பி வைக்கிறோம்.**

**☐ தமிழகத்தின் எல்லா பிரபல புத்தகக் கடைகளிலும் நர்மதா நூல்கள் கிடைக்கின்றன. அவர்களிடமிருந்து (தபால் செலவின்றி) பெறலாம். தபாலில் அனுப்புவதற்கான கட்டணம் அதிகமாக உள்ள நிலையில் தங்கள் ஊர் புத்தகக் கடையிலேயே பெறலாம். அவர்களையும் நல்ல நூல்கள் விற்க ஊக்குவிக்கலாம்!**

எங்களது இமெயில் முகவரி : narmadhamail@yahoo.co.in
எங்களது இணைய தளம் : www.newbooklands.com

Pages: **88**
**Price: Rs. 35.00**
Paper used 13.6 kg. SPB N.S
☐ Aangal Sevvai Pengal Velli - A Guide for Marital Happiness - in Tamil by Ra.Ki.Rangarajan ☐ This Edition: May 2006 ☐ Published by: T.S.Ramalingam, Narmadha Pathipagam, Chennai 600 017 ☐ D.T.P. Execution at: M/s. Star Graphics, Chennai 600 017 ☐ Printed at: M/s Malar Printers, Chennai - 600 034 ☐

# முன்னுரை

ஆங்கில மொழியில் Sympathy, Empathy என்று இரண்டு சொற்கள் இருக்கின்றன. இரண்டுமே பொதுவாக 'அனுதாபம் காட்டுவது' என்பதைத்தான் குறிக்கின்றன, என்று வெகுநாள் வரையில் நினைத்திருந்தேன். பிறகுதான் அகராதியில் தெரிந்தது —

'Sympathy' என்பது அடுத்தவரிடம் அனுதாபம் காட்டுவது; 'Empathy' என்பது அடுத்தவரின் நிலையில் நாம் இருந்தால் எப்படி இருக்கும் என்று உணர்வது. இந்த புரிந்துகொள்ளுதல் இருந்துவிட்டால் வாழ்க்கையில் பல பிரச்சினைகள் தீர்ந்துவிடும். குறிப்பாக, ஆணுக்கும் - பெண்ணுக்கும் இடையே ஏற்படக்கூடிய உரசல்கள் ஒழிந்துவிடும்.

தான் நினைப்பதையும், செய்வதையும் போலவே பெண் இருப்பாள், இருக்க வேண்டும் என்று ஆணும், தான் நினைப்பதையும் செய்வதையும் போலவே ஆண் இருப்பான், இருக்க வேண்டும் என்று எந்த பெண்ணும் நினைப்பது தவறான போக்கு என்று 'Men are from Mars Women are from Venus" என்ற புத்தகம் கூறியது. இரு பாலரும் இரு வேறு தன்மைகள் கொண்டவர்கள் என்பதை மனத்தில் இருத்தி வைத்தால் ஆண் - பெண் உறவுகள் சீர்படும், என்ற அந்த புத்தகத்தின் தத்துவத்தை ஒட்டி இது எழுதப்பட்டது.

இக் கட்டுரைகளை தொடராக வெளியிட்ட 'குங்குமம்' இதழுக்கும், புத்தக வடிவில் அழகாக பதிப்பித்துள்ள நர்மதா பதிப்பகத்திற்கும் என் நன்றி.

-ரா. கி. ரங்கராஜன்

## உட்பொதிவு







# 1

# ஆண்கள் செவ்வாய் பெண்கள் வெள்ளி

அப்போது எங்கள் பெண் லாரென் பிறந்து ஒரு வாரம் ஆகியிருக்கும். நானும், என் மனைவி பான்னியும் சலித்துக் களைத்துப் போய்விட்டோம். ராத்திரி பூரா லாரென் எழுந்துகொண்டு அழுது எங்களையும் எழுப்பிக் கொண்டிருந்தாள். சரியான தூக்கமே கிடையாது எங்களுக்கு. பிரசவத்தில் பான்னி ரொம்பக் கஷ்டப் பட்டுவிட்டாள். தாள முடியாத வலி இருந்து கொண் டிருந்தது. அதற்காக வலி நிவாரண மாத்திரை விழுங்கி வந்தாள். அவளால் எழுந்து நடக்கக்கூட முடியவில்லை.

அவளுக்கு உதவியாக நான் ஐந்து நாள் வீட்டிலேயே தங்கியிருந்தேன். கொஞ்சம் தேவலைப்போல் தோன்றிய தால் ஆறாம் நாள் வேலைக்குப் போய் விட்டேன்.

அன்றைக்குப் பார்த்து அவளுடைய வலி நிவாரண மாத்திரை தீர்ந்துவிட்டது. என் ஆபீசுக்குப் ஃபோன் செய்து எனக்கு சொல்லியிருக்கலாம். அதை விட்டு விட்டு, அப்போது என் வீட்டுக்கு வந்திருந்த என் தம்பியிடம் மாத்திரை வாங்கி வரும்படி சொன்னாள்.

ஆனால் அவன் அதை மறந்துவிட்டு எங்கோ போய் விட்டான்.

**நாள் முழுதும் அவள் நரக வேதனைப்பட்டிருக்கிறாள் என்பதை அறியாமல் நான்பாட்டுக்குச் சாயந்தரம் வீட்டுக்கு வந்தேன். பான்னி சிடுசிடுவென்று இருந்தாள். நான் வேலைக்குப் போய்விட்டதில் அவளுக்கு எரிச்சல் என்று நான் தப்பாக எண்ணிவிட்டேன்.**

''நாள் பூரா எனக்கு ஏகப்பட்ட வலி. மாத்திரை தீர்ந்துவிட்டது. அனாதை மாதிரி படுக்கையில் கிடந்தேன். ஏண்டி பாவி என்று கேட்க யாருமேயில்லை,'' என்றாள் பான்னி.

**என் மீது தப்பில்லை என்று காட்டிக்கொள்ளும் நோக்கத்துடன், ''ஏன்? எனக்கு ஃபோன் செய்ய வேண்டியதுதானே?'' என்றேன்.**

''உங்கள் தம்பியிடம் சொன்னேன். அவர் மறந்து விட்டார். வருவார் வருவார் என்று காலையிலிருந்து காத்துக்கொண்டிருந்தேன். என்னால் வேறு என்ன செய்ய முடியும் என்கிறீர்கள்? எழுந்து நடக்கக்கூட முடியவில்லை. எல்லாரும் என்னை அம்போ என்று விட்டுவிட்டார்கள்'' என்றாள் பான்னி.

**அதைக் கேட்டதும் எனக்குப் பொசுக்கென்று கோபம் வந்துவிட்டது. எனக்கும் நாள் முழுதும் ஆபீசில் சரியான வேலை. இவள் எனக்கு ஃபோன் செய்திருக்க வேண்டியது தானே என்று கோபம் கோபமாய் வந்தது. இவள் வலியுடன் இருந்திருக்கிறாள் என்பதே எனக்குத் தெரி யாது. அப்படியிருக்க, என்னைக் குற்றம் சாட்டுகிறாளே என்று கடுப்பு ஏற்பட்டது.**

வார்த்தைகள் தடித்தன. எனக்குக் களைப்பு, எரிச்சல். எங்காவது வெளியே போய்த் தொலையலாம் என்று தோன்றியது.

கதவை நோக்கி இரண்டு அடி வைத்திருப்பேன்-

என் வாழ்க்கையையே மாற்றியமைக்கும் நிகழ்ச்சி அப்போது நடந்தது.

''க்ரே, எங்கேயும் போகாதீர்கள், ப்ளீஸ்'' என்றாள் பான்னி. ''இப்போதுதான் நீங்கள் எனக்கு மிகவும் தேவை. ரொம்ப வலியாய் இருக்கிறது. நான் சரியாய்த் தூங்கி எத்தனை நாள் ஆகிறது, தெரியுமா? கொஞ்சம் நான் சொல்வதைக் கேளுங்கள்.''

நான் நின்றேன்.

பான்னி சொன்னாள்; ''நீங்கள் பாட்டுக்கு வெளியே போவது நியாயமா? நான் உடம்புக்கு ஒன்றுமில்லாமல், அன்பான-இனிமையான மனைவியாக இருக்கும் வரையில் என் பக்கத்தில் இருக்கிறீர்கள். கொஞ்சம் உடம்பு சரியில்லையென்றதும் வெளியே போகிறீர்கள்.''

சற்றுப் பேச்சை நிறுத்தினாள் பான்னி. அவள் கண்களில் நீர் முட்டிக் கொண்டு நின்றது. கம்மிய குரலில், ''எனக்கு ரொம்ப வலிக்கிறது. முன்னெப்போதையும்விட இப்போதுதான் நீங்கள் எனக்கு அதிகமாய்த் தேவைப் படுகிறீர்கள். ப்ளீஸ், என்னருகில் வந்து உட்கார்ந்து என்னைக் கொஞ்சம் உங்கள் மீது சாய்த்துக் கொள்ளுங்கள். எதுவும் பேச வேண்டாம். உங்கள் கையால் என்னை அணைத்துக்கொண்டால் போதும். தயவுபண்ணி வெளியே போகாதீர்கள்'' என்றாள்.

**நான் அவளை நெருங்கி, மௌனமாக அணைத்துக் கொண்டேன். அவள் விம்மினாள். அவள் கண்ணீர் என் தோளில் வழிந்தது. சில நிமிடங்களுக்கு மௌனமாயிருந்தாள். அவள் விரும்பியதெல்லாம் என்னுடைய பரிவான அணைப்புத்தான் என்று புரிந்தது.**

**அந்த நிமிடத்தில் நான் உண்மையான அன்பு - நிபந்தனையில்லாத அன்பு - என்றால் என்னவென்பதை உணர்ந்தேன்.**

*ரொம்ப அன்பான மனிதன் என்றுதான் என்னைப் பற்றி நான் எப்போதும் எண்ணி வந்திருக்கிறேன். ஆனால் பான்னி சொன்னதுதான் சரி. நான் ஓர் அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவை. அவள் சந்தோஷமாயும், சிரிப்பாயும் இருக்கும் வரை அன்பைப் பொழிகிறேன். ஆனால் அவள் மகிழ்ச்சியற்று, கடுகடுவென்று இருக்கும்போது, என் மீது அவள் தப்புச் சொல்கிறாள் என்று தோன்றுகிறது. வாக்குவாதம் செய்கிறேன், வெளியே போய்விடுகிறேன்.*

**நான் ஒரு பெண்ணாக இருந்திருந்தால் பான்னியின் மனம் எதைக் குறித்து ஏங்குகிறது என்பதை ஒரே விநாடியில் உள்ளுணர்வு மூலம் நான் அறிந்திருப்பேன். ஆனால் நான் ஓர் ஆண். பரிவோடு கைகளைப் பிடித்துக் கொள்வதும், அணைத்துக்கொள்வதும், சொல்வதைக் காது கொடுத்துக் கேட்பதும்தான் ஒரு மனைவிக்கு ரொம்ப முக்கியம் என்பது எனக்குப் புரியாமலே போய் விட்டது. ஆண் மனம் வேறு, பெண் மனம் வேறு என்பதைப் புரிந்து கொண்டதும், இருபாலாருக்குமிடையே வித்தியாசங்கள் உண்டு என்பதைக் கண்டு கொண்டதும், மனைவியிடம் நான் நடந்துகொள்ளும் முறையே மாறிவிட்டது.**

***மண வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சினைகள் குறித்து என்னிடம் ஆலோசனை கேட்க வருவோரிடம் என் எண்ணங்களைப் பகிர்ந்து கொண்டேன். அதன் பயனாக அவர்கள் வாழ்க்கையும் செம்மைப்பட்டது. வாரம் தோறும் என் சொற்பொழிவுகளைக் கேட்க வருகிற ஆயிரக்கணக்கான தம்பதியர், ஒரே நாளில் தங்கள் வாழ்க்கை மாறிவிட்டதைக் கண்டார்கள்.***

*ஏழு வருடங்களுக்கு முன்பு என் யோசனைகளினால் பயன்பெற்ற தம்பதியர், இன்றைக்கும் எனக்குக் கடிதம் எழுதுகிறார்கள் - தாங்கள் எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறோம் என்று. குழந்தைகளுடன் தாங்கள் மகிழ்ச்சியாக இருப்பதைக் காட்டும் புகைப்படங்களை அனுப்புகிறார்கள். தங்கள் திருமணத்தை முறிந்து போகாமல் காப்பாற்றியதற்காக எனக்கு நன்றி தெரிவிக்கிறார்கள். வாஸ்தவத்தில் அவர்களுக்கிடையே இருந்த பரஸ்பரப் பிரியம்தான் அவர்களுடைய மண வாழ்க்கையைக் காப்பாற்றியிருக்கிறது. என்றாலும், தன் வாழ்க்கைப் பங்காளியின் மனத்தைப் புரிந்து கொண்டிருக்காவிட்டால் எப்போதோ விவாகரத்து செய்துகொண்டிருப்பார்கள்.*

***ஆணின் மனப்பான்மை வேறு, பெண்ணின் மனப் பான்மை வேறு என்பதை அநேகமாக எல்லாரும் ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் எந்த வகையில் வேறுபடுகிறது என்று யாருக்கும் தெரிவதில்லை. கணவன் - மனைவி உறவுகள் எப்படி இருக்கவேண்டும் என்பதைக் குறித்து, கடந்த பத்து வருடங்களில் பல புத்தகங்கள் வெளி வந்துள்ளன. ஆனால் பெரும்பாலனவை ஒருதலைப் பட்சமான கருத்தைக் கொண்டவை. கணவன்தான்***

**குற்றவாளி என்கிற மாதிரியும், மனைவிதான் எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் என்கிற மாதிரியும் எழுதியிருக்கிறார்கள். கணவனும் மனைவியும் தங்களிடையே உள்ள வித்தியாசங்களைப் புரிந்துகொள்வதற்கு உதவி தேவைப்பட்டதால் இதை எழுதுகிறேன்.**

வாழ்க்கையின் எல்லா அம்சங்களிலும் ஆண் வேறாகவும் பெண் வேறாகவும் இருக்கிறார்கள் என்பதை உங்களுக்கு உணர்த்தவே இதை எழுதுகிறேன்.

**உணர்ச்சியில், கண்ணோட்டத்தில், பதில் உணர்வு காட்டுவதில் - அன்பு செலுத்துவதில் - தேவைகளில் - ரசனைகளில் - எல்லாவற்றிலும் கணவனும் மனைவியும் வெவ்வேறானவர்கள். இருவரும் வெவ்வேறு கிரகத்திலிருந்து வந்தவர்கள். இதைச் சொல்வதே இந்தக் கட்டுரைகளின் நோக்கம்.**

ஆம். உங்கள் மனைவி அல்லது கணவன் வேறொரு கிரகத்திலிருந்து வந்தவர் என்று நினைத்துக் கொண்டால், மோதமாட்டீர்கள்; எதிர்ப்புக் காட்ட மாட்டீர்கள்; ஆசையாக அவருடன் ஒத்துழைக்க ஆரம்பிப்பீர்கள்.

எனவே, சும்மாவானும் வேடிக்கையாக இப்படி ஒரு கற்பனை செய்துகொள்வோம்.

**ரொம்ப ரொம்பக் காலத்துக்கு முன்னே, ஆண்கள் எல்லாரும் செவ்வாய்க் கிரகத்தில் இருந்தார்கள். பெண்கள் எல்லாரும் வெள்ளிக் கிரகத்தில் இருந்தார்கள். அவர்களைப்பற்றி இவர்களுக்குத் தெரியாது. இவர்களைப்பற்றி அவர்களுக்குத் தெரியாது.**

ஒரு நாள் —





# வித்தியாசத்தை ஒப்புக்கொள்ளுங்கள்

செவ்வாய்க் கிரகத்தில் இருந்த ஆண்களுக்குப் பொழுது போகவில்லை. டெலஸ்கோப்பை எடுத்து வைத்துக் கொண்டு வெள்ளிக் கிரகத்தைப் பார்த்தார்கள்.

அங்கே அழகழகாய் நடமாடும் பெண்களைப் பார்த்ததும் அவர்களுக்குப் பிரமிப்புத் தாளவில்லை. அதுநாள் வரையில் பெண்களையே பார்த்திராதவர் களுக்கு, இப்போது பார்த்ததும் காலோடு தலை ஒரு பரவசம் பரவியது. அப்படியோர் உணர்வை அவர்கள் அனுபவித்ததே கிடையாது. காதல் வசப்பட்டுப் போனார்கள்.

ஒரு விண்வெளிக் கப்பலைத் தயார் செய்து கொண்டு வெள்ளிக் கிரகத்தை அடைந்தார்கள்.

வெள்ளிப் பெண்கள் ஓடிவந்து வரவேற்று உபசரித்தார்கள். அவர்களும் அந்த நாள் வரையில் காதல் என்ற உணர்ச்சியை அனுபவித்தது கிடையாது. செவ்வாய் ஆண்களிடம் மனத்தைப் பறிகொடுத்தார்கள்.

**செவ்வாய்க்காரர்களுக்கும், வெள்ளிக்காரிகளுக்குமிடையே ஏற்பட்ட காதலை வர்ணிக்க வார்த்தையில்லை. ஒருவரையொருவர் பிரியாமல் சேர்ந்தே இருப்பதில் ஒரு தனி சந்தோஷம் கண்டார்கள். சேர்ந்தே காரியங்கள் செய்தார்கள். எதுவானாலும் சேர்ந்தே பகிர்ந்து கொண்டார்கள். இருவரும் வெவ்வேறு உலகத்திலிருந்து வந்தவர்கள் என்பதை உணர்ந்திருந்ததால், அந்த வித்தியாசங்களே அவர்களுக்குப் புதுமையாக இருந்தது. தங்களுடைய தேவைகள் வித்தியாசமானவை, விருப்பு வெறுப்புகள் வித்தியாசமானவை, நடந்து கொள்ளும் முறை, பழகும் விதம் வித்தியாசமானவை என்பதை அறிந்துகொள்ள அறிந்துகொள்ள, அவர்களுடைய காதல் வலுவடைந்தது.**

அன்பும், பாசமும் பிணைந்தவர்களாகப் பல வருட காலம் அவர்கள் இனிதே வாழ்ந்தார்கள்.

ஒரு நாள் அவர்களுக்குப் பூமி கிரகத்துக்குப் போனாலென்ன என்ற ஆசை ஏற்பட்டது. விண்கலத்தின் மூலம் புறப்பட்டுப் பூமிக்கு வந்தார்கள்.

**ஆரம்பத்தில் கொஞ்ச நாள் எல்லாமே அற்புதமாயிருந்தது. அழகாயிருந்தது.**

**ஆனால் பூமியின் சுற்றுச் சூழல் அவர்களைப் பாதித்தது. ஒரு நாள் காலை கண் விழித்தபோது, 'அம்னீஷியா' என்ற விசித்திரமான நோய் அவர்களைப் பீடித்துக்கொண்டது. மறதி நோய்.**

செவ்வாய் ஆண்களுக்கும் சரி, வெள்ளிப் பெண் களுக்கும் சரி, தாங்கள் வெவ்வேறு கிரகத்திலிருந்து வந்தவர்கள் என்பது மறந்துவிட்டது. தங்களுடைய வேறு வேறான தன்மைகளைப் பற்றித் தெரிந்து கொண்டிருந்தது மொத்தமும் ஒரே இரவில் அவர்களுக்கு மறந்து விட்டது. அன்றுதொட்டு ஆண்களும், பெண்களும் மோதிக் கொள்ளத் தொடங்கிவிட்டார்கள்.

**நாம் வெவ்வேறான தன்மை உடையவர்கள் என்ற உணர்வு மறைந்துவிட்டதால் ஆண்களும், பெண்களும் சண்டை போட்டுக் கொள்கிறார்கள். அந்த முக்கியமான உண்மையை மறந்துவிட்டதால்தான் கணவனிடம் மனைவிக்கும், மனைவியிடம் கணவனுக்கும் கோபம் வருகிறது. எரிச்சல் ஏற்படுகிறது. நம்மைப் போலவே நமது வாழ்க்கைப் பங்காளியும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். நாம் எதை விரும்புகிறோமோ அதையே அவரும் விரும்ப வேண்டும். ஒரு விஷயத்தில் நமக்கு என்ன உணர்வு ஏற்படுகிறதோ அதேதான் மற்றவருக்கும் இருக்க வேண்டும் என்று எண்ணுகிறோம்.**

நம்மிடம் உண்மையான அன்பும், காதலும் அவர் களுக்கு இருக்குமானால், நாம் நினைப்பது போலவே அவர்களும் நினைக்க வேண்டியதுதானே? நாம் எப்படி நடந்துகொள்கிறோமோ அதேபோல் அவர்களும் நடந்து கொள்ள வேண்டியதுதானே? - இப்படி ஒரு தப்பான எண்ணம் நமக்கு இருக்கிறது. அப்படி அவர்கள் இல்லையென்னும்போது திரும்பத் திரும்ப ஏமாற்றம் உண்டாகிறது. அவர்களுக்கும் நமக்குமிடையே வித்தி யாசங்கள் உண்டு என்பதை பரிவோடு எண்ணிப் பார்க்க நமக்கு நேரம் இருப்பதில்லை.

*பெண்ணாகப்பட்டவள் ஆணைப் போலவே நினைக்க வேண்டும், ஆணைப்போலவே பேச வேண்டும். ஆணைப் போலவே நடந்துகொள்ள வேண்டும் என்று ஆண் எதிர்பார்க்கிறான்.*

***ஆணாகப்பட்டவன், பெண்ணைப் போலவே உணர வேண்டும். பெண்ணைப் போலவே பேச வேண்டும், பெண்ணைப் போலவே நடந்து கொள்ள வேண்டும் என்று பெண் எதிர்பார்க்கிறாள்.***

*இரண்டு பேர் எதிர்பார்ப்புமே தப்பு. இரண்டு பேரும் வெவ்வேறு தன்மை கொண்டவர்கள் என்பது இரு வருக்கும் மறந்துவிடுகிறது. இதன் விளைவாக, இரு வருக்குமிடையே தேவையற்ற உரசலும், பூசலும் முளைக்கின்றன.*

***'ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசங்கள் உண்டு' என்பதைத் தெளிவாக ஒப்புக்கொண்டு மதிப்புக் கொடுத்தால் ஆச்சரியமான முறையில் நமது குழப்பங்கள் மறையும்.***

*ஆண்கள் செவ்வாயிலிருந்து வந்தவர்கள்; பெண்கள் வெள்ளியிலிருந்து வந்தவர்கள் - இதை ஞாபகம் வைத்துக்கொண்டால் போதும், எல்லாப் பிரச்சினை களும் பளிச் பளிச்சென்று புரியும்!*

## வெறும் நல்லெண்ணம் போதாது

***நாம் பரஸ்பரம் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்கிறோம். அல்லது கல்யாணம் செய்து கொண்ட பின் காதலிக்கிறோம். இந்தக் காதல் சாசுவதமானது, என் றென்றும் அழியாதது என்று கற்பனை செய்து கொள்ள ஆரம்பித்து விடுகிறோம். நமது அப்பா அம்மாக்களுக்கு***

இருந்த பிரச்சினைகள் நமக்கு இருக்கவே இருக்காது என்று குழந்தைத்தனமாக நினைத்துக் கொள்கிறோம். காதலுக்குச் சோதனையே வராது என்றும், இனிமேல் என்றென்றும் சொர்க்கம்தான் என்றும் எண்ணிக் கொள்கிறோம்.

**மாயை சிறிது சிறிதாக விலகுகிறது. அன்றாட வாழ்க்கையின் பிரச்சினைகள் தலை தூக்குகின்றன. மனைவி தன்னைப்போலவே நினைத்து, தன்னைப் போலவே செயல்பட வேண்டுமென்று கணவன் நினைக்க ஆரம்பிக்கிறான். கணவன் தன்னைப் போலவே நினைத்து, தன்னைப்போலவே செயல்பட வேண்டும் என்று மனைவி நினைக்க ஆரம்பிக்கிறாள். நமக்குள்ளே வித்தியாசங்கள் உண்டு என்ற தெளிவான உணர்வு இல்லாமற்போனதும், ஒருவரையொருவர் புரிந்து கொள்வதும், மதிப்புக்கொடுப்பதும் போய் விடுகின்றன. அதிகாரம் பண்ணுகிறோம்; கசப்படைகிறோம்; குற்றம் காணுகிறோம்; பொறுமை இழக்கிறோம்.**

நல்ல நோக்கங்கள் இருந்தபோதிலும், நிறைய ஆசைகள் இருந்தபோதிலும் நமது காதல் மெல்ல மெல்லச் சாகத் தொடங்குகிறது. எப்படியே பிரச்சினைகள் முளைக்கின்றன. வெறுப்பு வளர்கிறது. ஒருவருக் கொருவர் பேச்சுப் பரிமாற்றமும், கருத்துப் பரிவர்த் தனையும் அறுந்து போகிறது. அவநம்பிக்கை அதிகரிக் கிறது. ஒருவர் கருத்தை மற்றவர் நிராகரிக்கிறோம். வெளிப்படையாகப் பேசாமல் உள்ளுக்குள் குமுறு கிறோம்.

**காதலின் மோகன சக்தி தொலைந்தே போகிறது.**

**நம்மை நாமே கேட்டுக் கொள்கிறோம்.**

நமக்குப்போய் ஏன் இதுபோல் நடக்க வேண்டும்? குழம்புகிறோம்.

**ஒவ்வொரு நாளும் லட்சக்கணக்கான பேர் அன்பைக் கொடுத்து அன்பைப் பெறுவதற்காக ஒரு வாழ்க்கைத் துணையைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். ஒவ்வோர் ஆண்டும் லட்சக்கணக்கான ஜோடிகள் காதல் வசப்பட்டு வாழ்க்கையைப் பிணைத்துக் கொள்கிறார்கள். பின்னர் அந்தக் காதல் உணர்வைத் தொலைத்துவிட்டு வேதனை யுடன் பிரிகிறார்கள். காதலித்து மணந்து கொள்கிறவர் களில் ஐம்பது சதவிகிதத்தினர்தான் தொடர்ந்து குடும்பம் நடத்தி வருகிறார்கள். அந்த ஐம்பது சதவிகிதத்திலும் பாதிப்பேர் மன நிறைவு இல்லாமல்தான் வாழ்ந்து வருகிறார்கள். விசுவாசம் காரணமாக, அல்லது கடமை யுணர்வு காரணமாக, அல்லது மறுபடியும் அடியைப் பிடி என்று ஆரம்பிக்க வேண்டுமே என்ற பயம் காரணமாக, வேண்டா வெறுப்பாய்க் குடும்பம் நடத்துகிறார்கள்.**

ஆனால் ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசங்கள் உண்டு என்பதை ஏற்றுக்கொண்டு வாழ்கிறவர்கள் தொடர்ந்து அன்பிலும், காதலிலும் திளைக்கிறார்கள்.

அந்த வித்தியாசங்களை உணரும்போது, இருதய ஆழத்தில் உள்ள அன்பைக் கொடுக்கலாம்; பெறலாம். அப்போது பிரச்சினைகளுக்கு ஆக்கப்பூர்வமான தீர்வு கிடைக்கிறது. விரும்புவதை அடைவதில் வெற்றி கிட்டுகிறது.

**சரி, கணவனைப்பற்றி மனைவியும், மனைவியைப் பற்றி கணவனும் வாடிக்கையாகக் கூறும் புகார்கள் என்ன? பார்ப்போம் —**





3

# நான் வழி சொல்கிறேன்!

'நான் என்ன சொன்னாலும் என் கணவன் காது கொடுத்துக் கேட்பது கிடையாது' - இதுதான் பெண்கள் அடிக்கடி சொல்லும் புகார்.

ஒன்று, மனைவி பேசும்போது கணவன் அதைப் பொருட்படுத்துவதே இல்லை.

அல்லது, இரண்டு மூன்று வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்கிறான். இன்னதுதான் பிரச்சினை என்று தானாகவே ஒரு முடிவு செய்துகொள்கிறான். அவ்வளவு தானே? 'என்கிட்டே விடு! நான் வழி சொல்கிறேன், அதன்படி செய்!' என்கிறான்.

அன்போடுதான் அப்படிச் சொல்கிறான். ஆனால் அவளால் அதை ஒப்புக் கொள்ள முடியவில்லை. உடனே இவனுக்குத் திகைப்பாக இருக்கிறது. 'என்ன இவள்! நாம் இத்தனை அக்கறையாகச் சொல்கிறோம். இவள் எடுத்துக் கொள்ளமாட்டேன் என்கிறாளே!' என்று குழப்பம் கொள்கிறான்.

'நான் சொல்வதை முழுக்க கேட்டுவிட்டு அப்புறம் சொல்லுங்கள்' என்று அவள் எவ்வளவு தடவை சொன்னாலும், இவன் கேட்பதில்லை. தான் கண்டுபிடித்த

'வழி'யையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கிறான்.

அவள் விரும்புவதெல்லாம் தன் நிலைமையைக் கண்டு அவன் அனுதாபப்பட வேண்டும் என்பதுதான். அந்த நிலைமைக்குப் பரிகாரம் எதுவும் அவள் எதிர்பார்க்கவில்லை.

மனைவியைப் பற்றிக் கணவன்மார்கள் அடிக்கடி சொல்லும் புகார் என்ன? 'எப்போது பார்த்தாலும் அவள் என்னைச் சீர்திருத்தம் பண்ணப் பார்க்கிறாள்' என்பதே.

உண்மை. கணவன் மீது ஆழமான அன்பு ஏற்பட்டதுமே மனைவி அவன் நல்லபடி முன்னேற வேண்டும் என்று விரும்புகிறாள். அவனை அப்படி முன்னேற்றுவது தன் பொறுப்பு என்று நினைக்கிறாள். அவன் திறம்பட செயலாற்றுவதற்குத் தான் துணை செய்ய வேண்டுமென்று முயற்சி செய்கிறாள்.

விளைவு?

வீட்டுக்குள் தானே ஓர் அபிவிருத்திக் கமிட்டி அமைத்துக்கொண்டு, தானே அதற்குத் தலைவியாகவும் பதவி ஏற்கிறாள். அதன் பிறகு அவளுடைய கவலையெல்லாம் அவனைப் பற்றித்தான். அவளுடைய உதவியை அவன் எவ்வளவுதான் உதறட்டுமே, அவள் விடுவதில்லை. அவனுக்குத் துணை செய்ய, எப்போது என்ன பண்ண வேண்டும் என்பதைச் சொல்ல, எந்தச் சந்தர்ப்பத்தையும் நழுவவிடுவதில்லை.

அவனைக் கண்ணுக்குள் வைத்துக் காப்பாற்றி வளர்க்கிறோம் என்று அவளுக்கு நினைப்பு, அவனுக்கோ, அவள் தன்னை அடக்கி ஆதிக்கம் செய்து கொண்டி

ருக்கிறாள் என்று வருத்தம், தன் நிலைமையை உணர்ந்துகொள்வதை விட்டுவிட்டு எதற்காக இப்படி நச்சரிக்கிறாள் என்பது அவன் எண்ணம்.

இப்படி இருவரும் வெவ்வேறு கோணத்தில் சிந்திப்பதை 'நான் வழி சொல்லுகிறேன்' என்று ஏன் ஆண்கள் சொல்கிறார்கள்? 'நான் சீர்திருத்தி அபிவிருத்தி செய்கிறேன்' என்று பெண்கள் ஏன் சொல்ல வேண்டும்? இதைப் புரிந்துகொண்டால் இருபக்கத்துப் பிரச்சினையும் தீரும். அது எப்படி முடியும்?

## செவ்வாயில் ஆண்கள்

காலத்தைப் பின்னுக்குத் தள்ளிப் பார்ப்போம்-

செவ்வாய் ஆண்களும், வெள்ளிப் பெண்களும் ஒருவரையொருவர் சந்திப்பதற்கு முன்பு, பூமிக்கிரகத்திற்கு வந்து சேருவதற்கு முன்பு, அவர்களுடைய தனித்தனி குணாதிசயங்கள் என்ன?

சக்தி, செயலாற்றும் திறமை, சாதனை இவற்றுக்குத் தான் ஆண்கள் மதிப்புக் கொடுக்கிறார்கள். எந்த வேலையானாலும் தங்கள் கெட்டிக்காரத்தனத்தை நிரூபித்துக் காட்ட வேண்டும்; தங்கள் சக்தியையும், திறமையையும் வளர்த்துக்கொள்ள வேண்டும்; இதுவே ஆண்களின் நோக்கம், வெற்றியும், சாதனையும்தான் அவர்களுக்கு மனநிறைவு தருகின்றன.

தங்கள் திறமையையும், தகுதியையும் எடுத்துக் காட்டும்படிதான் ஆண்கள் ஒவ்வொன்றையும் அமைத்துக் கொள்கிறார்கள். அவர்களுடைய உடைகூட அப்படித்தான். போலீஸ் அதிகாரிகள், ராணுவ வீரர்கள், பிசினஸ்காரர்கள், விஞ்ஞானிகள், டாக்ஸி ஓட்டிகள்,

என்ஜினீயர்கள், சமையல் நிபுணர்கள் யாரை வேண்டுமானாலும் பாருங்கள்- தங்கள் தங்கள் சக்தியையும், திறமையையும் காட்டுகிற மாதிரி யூனிஃபாரம் அணிகிறார்கள். குறைந்தபட்சம் தொப்பியாவது அப்படித்தான் போட்டுக் கொள்கிறார்கள்.

ஆண்கள் பத்திரிகைகள் படித்துக்கொண்டு வீட்டில் உட்கார்ந்திருப்பதில்லை. வேட்டை, மீன் பிடிப்பு, கார் ரேஸ் போன்ற வெளிப்புற விளையாட்டுக்களில்தான் அவர்களுக்கு விருப்பம் அதிகம். உலகச் செய்திகள். பருவ நிலை, விளையாட்டுக்கள் முதலியவற்றில் அவர்களுக்குப் பிரியம் உண்டு. காதல் நாவல்களிலோ, சுய முன்னேற்றப் புத்தகங்களிலோ அவர்களுக்கு அக்கறை கிடையாது.

இன்றைக்குப் பூமிக்கிரகத்தில் உள்ள பெண்களையும், ஆண்களையும் கவனியுங்கள். பெண்களுக்குக் காதலைப் பற்றிய கனவுகள்; ஆண்களுக்கு வேகமான கார்கள், வேகமான கம்ப்யூட்டர்கள், புதுமையான கருவிகள், சக்தி வாய்ந்த டெக்னாலஜி இவற்றிலே மோகம். தங்கள் சக்தியை வெளிப்படுத்துவதற்கு, வெற்றிகளை அடைவதற்கு, இலக்குகளை அடைவதற்கு என்ன பொருள்கள் கிடைக்கும் என்பதிலேயே ஆண்கள் குறியாக இருக்கிறார்கள்.

தங்கள் இலக்கை அடைவது ஒன்றுதான் ஆண்களுக்கு மிக முக்கியமானது. அதையும் வேறு யார் மூலமாகவும் அடையக்கூடாது. தாங்களாகவேதான் அடைய வேண்டும்; அதுதான் அவர்களுக்குப் பெருமை. சுதந்திரம்தான அவர்களுடைய திறமைக்கும், தகுதிக்கும் அடையாளம்.

இதனால்தான் தங்களை யாரேனும் திருத்தினாலோ, இன்னது செய் என்று சொன்னாலோ ஆண்களுக்குப் பிடிப்பதில்லை. எந்த ஆலோசனையையும் கேட்காத போது, யாரேனும் யோசனை சொன்னால் அவர்கள் முகம் சுளிக்கிறார்கள். என்ன செய்வதென்று எனக்குத் தெரியாதா? அல்லது இதை நானாகவே செய்து கொள்ள மாட்டேனா? இவர்கள் என்ன எனக்கு யோசனை சொல்வது? என்று நினைக்கிறார்கள். அவர்களுக்குத் தங்கள் தகுதி, திறமைதான் பெரிது. அந்த விஷயத்தில் யாரேனும் குறுக்கிட்டால் ரோஷம் ஏற்படுகிறது.

## வழி தெரியாதபோது...

தன் பிரச்சினைகளைத் தானே தீர்த்துக்கொள்ள வேண்டும் என்று நினைப்பதால் ஆண்கள் யாரிடமும் அறிவுரை கேட்பதில்லை. ரொம்ப அவசியம் நேர்ந்தால் யாரேனும் நிபுணரிடம் வேண்டுமானால் கேட்டுக் கொள்வார்கள். 'என் பிரச்சினையை நானே தீர்த்துக் கொள்ள முடியும் என்று எண்ணும்போது எதற்காகப் பிறத்தியாரை இழுக்க வேண்டும்?' என்பது ஆண்களின் எண்ணம். எனவே இன்னொருவரின் உதவி தேவைப் பட்டாலொழிய, தன் பிரச்சினையைத் தன்னுள்ளேயே வைத்துக் கொள்கிறார்கள். தானாகவே செய்து கொள்ளக்கூடிய விஷயத்திற்குப் பிறரின் உதவியைக் கேட்டால் அது பலவீனத்திற்கு அறிகுறி என்று எண்ணு கிறார்கள்.

அதே சமயம், நிஜமாகவே உதவி தேவைப்படும் போது இன்னொருவரின் உதவியை நாடினால் அது அறிவுக்கு அடையாளம். அந்த மாதிரி சமயத்தில் தான் மதிக்கும்

நபரைத் தேடிப் போகிறார்கள். அவரிடம் தங்கள் பிரச்சினையைப் பற்றி பேசுகிறார்கள்.

மற்ற நேரங்களில் யார் யோசனை சொன்னாலும் ஆணுக்குப் பிடிப்பதில்லை. செவ்வாய் கிரகத்தில் இருந்த காலம் தொட்டு ஆண்களிடம் இந்த மனோபாவம் இருந்து வருவதைப் பெண்கள் மறந்து விடுகிறார்கள்.

கணவனுக்கும் மனைவிக்கும் உரசல் ஏற்பட இதுவே காரணமாக இருக்கிறது.

எடுத்துக்காட்டாக - மேரியும், டாமும் ஒரு பார்ட்டிக்குப் போகிறார்கள். டாம் காரை ஓட்டிக் கொண்டிருக்கிறான். இருபது நிமிடமாகியும், ஒரே இடத்தில் திரும்பத் திரும்பச் சுற்றிக் கொண்டிருக்கிறோம் என்பது மேரிக்குத் தெரிகிறது. கணவன் வழியைத் தவற விட்டு விட்டான் என்று புரிகிறது. பொறுத்துப் பொறுத்துப் பார்த்து, கடைசியில் யாரையாவது வழி கேட்கலாமே என்று யோசனை கூறுகிறாள்.

டாம் எதுவும் பேசவில்லை. மௌனமாகக் காரை ஓட்டுகிறான். ஒரு வழியாய்ப் பார்ட்டி நடக்கும் இடத்தை அடைகிறார்கள்.

டாம் கலகலப்பாகவே இல்லை. புர்புர்ரென்று இருக்கிறான். பார்ட்டி முடிந்து வீடு திரும்பும்போதுகூட அப்படியே இருக்கிறான். 'நாம் அப்படி என்ன தப்பாகச் சொல்லிவிட்டோம்' என்று மேரிக்குத் திகைப்பாக இருக்கிறது.

'எனக்கு உங்களிடம் நிறைய அன்பு, நிறைய அக்கறை, அதனால், வழி தெரியாமல் கஷ்டப்படுகிறீர்களே என்பதால்தான் யாரையாவது கேட்கலாமே என்று சொன்னேன்' என்று அவள் நினைத்துக் கொள்கிறாள்.

ஆனால் டாமுக்கு ரோஷம். 'உன்னை ஓர் இடத்துக்கு ஒழுங்காய் அழைத்துப்போக எனக்குத் தெரியாதா? என் மீது உனக்கு நம்பிக்கை இல்லை. என்னைக் கையாலா காதவனென்று நினைத்துவிட்டாய்?' என்று மனதுக்குள் மேரியைக் குற்றம் சாட்டுகிறான்.

வேறு கிரகமான வெள்ளியிலிருந்து வந்தவர்கள் பெண்கள் என்பதும், அவர்களுடைய மனப்போக்கு வித்தியாசமானது என்பதும் டாமுக்கு மறந்துவிடுகிறது. டாமுக்கு மட்டுமல்ல; எல்லா ஆண்களுக்குமே மறந்து விடுகிறது.

எந்த விதத்தில் வித்தியாசம் என்றால்...?





# 4

# திரும்பிய திசையெல்லாம் பூந்தோட்டம்!

ஆண்கள் செவ்வாய் கிரகத்திலிருந்து வந்தவர்கள் என்று வைத்துக்கொண்டால், அப்படி வெள்ளிக் கிரகத்திலிருந்து வந்த பெண்களோ வேறு விதம்.

அன்பு, மற்றவரிடம் பரிவு, அழகு, உறவுகள் - இவற்றுக்கு மதிப்பளிப்பவர்கள் பெண்கள். ஒருவருக் கொருவர் ஆதரவு கொடுப்பதிலும், உதவி செய்வதிலும், போற்றுவதிலும் நாட்டம் கொண்டவர்கள் பெண்கள். உணர்ச்சிகளைப் பகிர்ந்து கொள்வதிலும், பரிமாறிக் கொள்வதிலும் பெண்களுக்கு மனநிறைவு கிடைக்கிறது.

நீண்ட நெடுஞ்சாலைகளை அமைப்பதிலோ, வானளா வும் கட்டடங்களை எழுப்புவதிலோ பெண்களுக்கு அக்கறை கிடையாது. அதைக் காட்டிலும் நேயத்தோடு, சமுதாய உணர்வோடு சேர்ந்து வாழ்வதிலும், பிரியத் துடன் ஒத்துழைப்பதிலும் இவர்களுக்கு நாட்டம் அதிகம். தொழில், தொழில் நுணுக்கம் ஆகியவற்றைவிட உறவுகளே இவர்களுக்கு முக்கியம். இப்படிப் பெரும் பாலான விஷயங்களில் செவ்வாய்க்காரர்களுக்கு நேர் மாறானவர்கள் வெள்ளிக் காரிகள்.

ஆண்கள் தங்கள் முக்கியத்துவத்தைக் காட்ட யூனிஃபாரம் அணிவதுபோல, பெண்கள் அணிவதில்லை. தங்கள் மனநிலைக்குத் தக்கபடி, ஒவ்வொரு நாள் ஒவ்வொரு விதமாக டிரஸ் செய்து கொள்கிறார்கள். அதிலே அவர்களுக்குத் தனி சந்தோஷம். தங்கள் தனிப்பட்ட உணர்வை வெளிப்படுத்திக் கொள்வது அவர்களுக்கு முக்கியம். ஒரே நாளில் வெவ்வேறு உடை அணிவார்கள். இலக்கை எட்டிப் பிடிப்பதும், வெற்றி பெறுவதும் அவர்களுக்கு பிரதானமல்ல; தங்கள் சொந்த உணர்ச்சிகளைப் பிறருடன் பகிர்ந்து கொள்வதுதான் பிரதானம். பேசுவது-தங்கள் உணர்ச்சிகளை மற்றவரிடம் விவரிப்பது-இதிலே அவர்களுக்குத் தனித் திருப்தி. அதிலே அவர்களுக்குக் கிடைப்பதைப் போல மாபெரும் மனநிறைவு வேறு எதிலும் கிடையாது.

வெள்ளிக்காரிகளின் இந்தத் தனித் தன்மைகளைச் செவ்வாய்க்காரர்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை.

ஒரு ரேஸில் ஜெயிக்கும் போது, ஓர் இலக்கை அடையும்போது, ஒரு பிரச்சினைக்குத் தீர்வு கண்டு பிடிக்கும்போது தனக்கு என்ன திருப்தி கிடைக்கிறதோ அதே திருப்தி பெண்களுக்குக் கிடைக்கிறது என்பதை உணர முடிவதில்லை.

இரண்டு ஆண்கள் ஓட்டலுக்குச் சாப்பிடச் செல் கிறார்கள் என்றால், அது ஒரு பிசினஸ் திட்டத்தைப் பேசி முடிப்பதற்காகத்தான் இருக்கும். அத்துடன், சாப்பாட்டுடன் கூடவே உள்ள மற்ற தொல்லைகள் - கடைக்குப் போய்ச் சாமான்கள் வாங்கி வருவது, சமைப்பது, சாப்பிட்ட தட்டுகளைக் கழுவுவது முதலான தலைவலிகள் - கிடையாது. சாப்பிட்டோமா, பிசினஸ் பேசினோமா, தீர்ந்தது விஷயம் என்று நினைப்பார்கள்.

இரண்டு பெண்கள் ஓட்டலுக்குச் சாப்பிடச் செல்கிறார்கள் என்றால் அது உறவைக் கெட்டிப்படுத்திக் கொள்ள ஒரு சந்தர்ப்பம். பரஸ்பரம் ஆதரவு காட்டி ஆதரவு பெற ஒரு வாய்ப்பு. ஓட்டலில் சாப்பிடும்போது அவர்களுடைய சம்பாஷணை மனம் திறந்ததாக, அந்தரங்கமானதாக இருக்கும். ஒரு வைத்தியருக்கும் நோயாளிக்குமிடையே இருப்பது போன்ற ஒரு நெருக்கத்தை அங்கே காண முடியும்.

பெண்கள் மனத்தத்துவத்தில் பட்டம் பெற்றவர்கள். மற்றவருக்கு யோசனை வழங்குவதில் பட்ட மேற் படிப்புப் படித்தவர்கள். வாழ்க்கையை வளப் படுத்தக் கூடிய, குணப்படுத்தக்கூடிய, வளர்க்கக்கூடிய அனைத்திலும் பெண்கள் பிரியம் கொள்கிறார்கள். அவர்களுடைய உலகத்தில் திரும்பிய திசையெல்லாம் பூந்தோட்டங்கள், கடை கண்ணிகள், ரெஸ்டாரெண்டுகள்.

பெண்களுக்கு உள்ளுணர்வு அதிகம். மற்றவர்களின் தேவை என்ன என்பதை முன்கூட்டி அறிவதென்பது நூற்றாண்டு நூற்றாண்டாக அவர்களுக்குக் கைவந்த பழக்கம். பிறரின் தேவைகளையும், உணர்ச்சிகளையும் பரிவோடு பார்ப்பதில் அவர்களுக்குப் பெருமை. ஒருவரிடம் அன்பு இருக்கிறதென்றால் அவருக்கு உதவிக்கரம் நீட்டுவதும், அவர்கள் கேட்காமல் துணை செய்வதும்தான் ஒருவர் மீது அன்பு இருக்கிறதென்பதற்கு அடையாளம் என்று பெண்கள் நினைக்கிறார்கள்.

ஆனால் ஆண்களின் குணம் வேறு. ஒரு பெண் ஏதேனும் அறிவுரை கூறினால், யோசனை சொன்னால், அவளுக்குத் தன் திறமை மீது நம்பிக்கை இல்லை என்று அர்த்தம் செய்து கொள்கிறார்கள்.

ஒரு வேலை நடந்து கொண்டிருக்கும்போது, அது மேலும் நன்றாக நடைபெறும்படி செய்ய முடியும் என்று பெண்கள் திடமாக நம்புகிறார்கள். எந்த வேலையிலும் ஓர் அபிவிருத்தி செய்ய விரும்புவது அவர்களுடைய இயற்கை. தான் பிரியம் கொண்டுள்ள ஒருவரிடம் அவருடைய காரியத்தில் என்ன அபிவிருத்தி செய்யலாம்; அதை எப்படி செய்யலாம் என்று அறிவுரை கூறப் பெண்கள் தயங்குவதில்லை. ஆக்கபூர்வமாக யோசனை சொல்வது அன்பினால்தான் என்பது அவர்கள் எண்ணம்.

ஆண்கள் அப்படியல்ல, வேலை நடக்கிறதா? விடு, மூக்கை நுழைக்காதே. இதுதான் ஆண்களின் கொள்கை. இதனால்தான் மனைவி ஒரு யோசனை சொன்னால், ஓர் அபிவிருத்தியைக் குறிப்பிட்டால் அது தன்னை அவமதிப்பதாக நினைக்கிறார்கள்.

ஒரு பார்ட்டிக்குப் போகும் வழி தெரியாமல் தாம் திண்டாடும்போது, யாரையாவது கேட்கலாமே என்று மேரி சொல்வதுகூட அவனுக்கு எரிச்சல் ஏற்படுத்துகிறது. 'நான் ஒழுங்காக அழைத்துப் போகமாட்டேனா? இந்தச் சின்ன விஷயத்தில்கூட என்னை நம்பாதவள் பெரிய விஷயத்தில் எப்படி நம்பப் போகிறாள்?' என்று கோபம் கொள்கிறான்.

பெண்களின் இயல்பும், குணமும் வேறானவை என்பதை உணராத ஆண், அவளுக்கு உதவி செய்வதாக நினைத்துக்கொண்டு நிலைமையை மேலும் மோசமாக்குகிறான்.

ஒரு மனைவி, அன்று பகல் முழுதும் தனக்கு என்னென்ன பிரச்சினைகள் ஏற்பட்டன என்பதைக் கணவனிடம் சொல்வது எதற்காக? தன் உணர்ச்சிகளை அவனுடன் பகிர்ந்துகொள்ள விரும்புவதால்தான்.

மனைவி பேசும்போது கணவன் குறுக்கிட்டு, 'நான் வழி சொல்கிறேன் கேள்' என்று ஆரம்பித்து யோசனை சொல்லத் தொடங்கிவிடுகிறான். அவளுக்கு உதவி செய்ய வேண்டுமென்பதுதான் அவன் நோக்கம். அவளுக்குப் பிரயோசனமானவனாக இருக்க வேண்டுமென்பதுதான் அவன் ஆசை. தன் திறமையை வெளிப்படுத்தி அவளுக்கு வழி சொல்லி, அவளுடைய மதிப்பில் உயர வேண்டு மென்பதுதான் அவன் விருப்பம்.

ஆனால் தான் 'வழி' சொன்ன பிறகும் மனைவி ஏன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொள்கிறாள் என்று கணவனுக்குப் புரிவதில்லை. 'தன் யோசனையை அவள் உதறிவிட்டாளே' என்று கோபம் கொள்கிறான்.

உதாரணமாக, டாம், மேரி இருவரையும் எடுத்துக் கொள்வோம். இருவருமே வேலைக்குப் போகிறவர்கள்.

நாள் முழுதும் வேலை செய்துவிட்டுக் களைப்புடன் வீடு திரும்புகிறாள் மேரி. பொத்தென்று சோபாவில் உட்கார்ந்து கொள்கிறாள்.

மேரி சொல்கிறாள்: சே! எவ்வளவு வேலை! ஐந்து நிமிஷம் அக்கடாவென்று இருந்தோம் என்பது இல்லை.

டாம் சொல்கிறான்: பேசாமல் நீ இந்த வேலையை விட்டுவிடு. எதற்காக இப்படி உயிரை விட்டுக்கொண்டு வேலை செய்கிறாய்? வேறு ஏதாவது உனக்குப் பிடித்தமான வேலையாகப் பார்த்துக்கொள்.

மேரி: இந்த வேலை எனக்குப் பிடித்துத்தானே இருக்கிறது? ஒரே நிமிஷத்தில் எல்லாவற்றையும் நான் தலைகீழாக மாற்றி அமைக்க வேண்டும் என்று எதிர் பார்க்கிறார்கள்.

டாம்: *அவர்கள் சொல்வதையெல்லாம் காதில் வாங்காதே. உன்னால் என்ன செய்ய முடியுமோ அதைச் செய், போதும்.*

மேரி: *அப்படித்தான் செய்கிறேன். இன்றைக்கு என் அத்தைக்குப் போன் பண்ண நினைத்தேன். கம்ப்ளீட்டாய் மறந்துவிட்டது.*

டாம்: *அதனால் என்ன? உன் அத்தை புரிந்து கொள்வாள். தப்பாக நினைக்கமாட்டாள்.*

மேரி: *அத்தை எவ்வளவு கஷ்டத்தில் இருக்கிறாள் தெரியுமா? நான் ஃபோனில் இரண்டு வார்த்தைப் பேசி இருந்தால் அவளுக்கு ஆறுதலாக இருந்திருக்கும்.*

டாம்: *நீ மனசைப் போட்டு ரொம்பக் குழப்பிக் கொள்கிறாய். அதனால்தான் உனக்கு இப்படி நிம்மதி இல்லாமல் போகிறது.*

மேரி: *(கோபத்துடன்) நான் ஒன்றும் நிம்மதி இல்லாமல் இல்லை. நான் பேசுவதைக் கொஞ்சம் காது கொடுத்துத்தான் கேளுங்களேன்!*

டாம்: கேட்டுக்கொண்டுதானே இருக்கிறேன், சொல்லு.

மேரி: *ஹுக்கும், உங்களிடம் சொல்ல வந்தேன், பாருங்கள்.*

*மேரி விருட்டென்று எழுந்து போகிறாள். டாம் திருதிருவென்று விழிக்கிறான்.*

*இப்படிப் பேசியதற்குப் பதிலாக-*





# 5

# ஆண்களுக்கு ஒரு குகை உண்டு!

**த**ங்களுக்கு நேர்மாறான குணமுடையவர்கள் பெண்கள் என்பது ஆண்களுக்குத் தெரிவதில்லை. குறிப்பாக, 'இவ்வளவுதானே? நான் சொல்வதைக் கேள்' என்று ஆண்கள் சொல்வது பெண்களுக்குப் பிடிக்காது என்பதை உணர்வது கிடையாது. பெண்கள் விரும்புவதெல்லாம் தாங்கள் புலம்புவதை ஆண்கள் காது கொடுத்துக் கேட்க வேண்டும் என்பதுதான். அது பல கணவன்மார்களுக்குத் தெரியாததால்தான் சிக்கல். எந்தப் பெண்ணும் இன்னொரு பெண் தன் பிரச்சினையைச் சொல்லும்போது அதற்குத் தீர்வு சொல்லமாட்டார்கள். பொறுமையுடன் - அனுதாபத்துடன் அந்தப் பெண்ணின் உணர்ச்சிக்கு மதிப்புத் தந்து கேட்டுக் கொள்வார்கள்.

டாம்-மேரி தம்பதியரின் விஷயத்திலும் இப்படித் தான். மேரியின் உணர்ச்சிகளை டாம் காது கொடுத்துக்

கேட்டுக் கொண்டிருந்தால் போதும். அதுவே அவளுக்கு எல்லையற்ற நிம்மதியும், மனநிறைவும் ஏற்பட்டிருக்கும்.

மேரியின் மனநிலையை டாம் புரிந்து கொண்டிருந்தால் அவர்கள் சம்பாஷணை போன அத்தியாயத்தில் நடந்த மாதிரி இல்லாமல் - கீழ்க்கண்ட மாதிரி நடந்திருக்கும்.

வேலைக்குப் போய்விட்டுச் சாயந்தரம் வீடு திரும்பு கிறாள் மேரி. அலுப்பும், களைப்புமாகப் பொத்தென்று சோபாவில் விழுகிறாள்.

**மேரி:** 'சே! எத்தனை வேலை! எத்தனை வேலை! ஐந்து நிமிஷம் அக்கடா என்று இருக்க முடியவில்லை.'

டாம் பதற்றப்படவில்லை. நிதானமாக, 'இன்றைக்கு ரொம்பக் கஷ்டப்பட்டுவிட்டாய் போலிருக்கிறது?' என்கிறான்.

**மேரி:** 'பாருங்களேன் பின்னே, ஒரே நிமிஷத்தில் எல்லாவற்றையும் தலைகீழாக மாற்ற வேண்டுமென்று எதிர்பார்க்கிறார்கள். என்ன செய்வதென்றே புரிய வில்லை.'

டாம் சற்றுப் பேசாமல் இருந்துவிட்டு, பிறகு, 'அடடா' என்றான்.

**மேரி:** 'இன்றைக்கு என் அத்தைக்குப் ஃபோன் செய்யவேண்டும் என்று நினைத்திருந்தேன். அதுகூட மறந்துவிட்டது.'

டாம் புருவத்தை லேசாக உயர்த்தி, 'அடப்பாவமே' என்கிறான்.

**மேரி:** 'நான் இரண்டு வார்த்தை பேசியிருந்தால் அத்தைக்கு எவ்வளவோ ஆறுதலாக இருந்திருக்கும். செய்யவில்லை. மனசுக்குக் கஷ்டமாக இருக்கிறது.'

டாம்: 'உனக்கு ரொம்ப இளகின மனசு. இப்படி என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொள்.'

மேரி எழுந்து வந்து கணவனின் அருகே உட்காரு கிறாள். டாம் அவளை ஆதரவுடன் அணைத்துக் கொள் கிறான். அந்த அணைப்பில் மேரி ஆறுதல் பெற்றவளாக நிம்மதி பெருமூச்சு விடுகிறாள். பிறகு, 'உங்களிடம் பேசிக்கொண்டிருந்ததில் மனசிலிருந்த பாரம் குறைந்து விட்டது. ரொம்ப தேங்ஸ்', என்று புன்னகையுடன் சொல்கிறாள்.

நிம்மதி ஏற்பட்டது மேரிக்கு மட்டுமல்ல; டாமுக்கும் தான். குறுக்கிட்டு எதுவும் பேசாமல் வெறுமே கேட்டுக் கொண்டிருந்ததிலேயே மேரிக்கு இத்தனை சந்தோஷமா? டாமுக்கு ஆச்சரியமாக இருக்கிறது. இந்தப் புதிய ஞானம் அவன் கண்களைத் திறக்கிறது.



பெண் இப்படியென்றால், ஆண் வேறு விதம்.

கணவனுக்குப் புத்திமதி கூறுகிறாள். குறையைச் சுட்டிக்காட்டுகிறாள். எல்லாம் நல்லெண்ணத்துடன் தான். ஆனால் தன் பேச்சு அவனுக்கு எரிச்சல் ஊட்டுவதை அறிவதில்லை. கொஞ்சம் கொஞ்சமாக அவனுடைய எதிர்ப்பையும், வெறுப்பையும் சம்பாதித்துக் கொள் கிறோம் என்பதை உணர்வதில்லை.

நாம் ஒன்றும் தப்பாகச் சொல்லிவிடவில்லையே என்றுதான் அவள் நினைப்பாள். ஆனால் அவள் பேச்சுக்குள்ளே ஒரு புத்திமதி மறைந்திருக்கும். ஒரு

குற்றச்சாட்டு ஒளிந்திருக்கும். அது அவளுக்கே தெரியாது. உதாரணமாகச் சில பேச்சை இங்கே பாருங்கள்:

*1.* 'இதை வாங்க வேண்டுமென்று ஏன்தான் உங்களுக்குத் தோன்றியதோ? ஏற்கனவே உங்களிடம் இதே போல ஒன்று இருக்கிறதே!'

*2.* 'கழுவின தட்டில் ஈரத்தைத் துடைக்க மறந்து விட்டீர்கள். அப்படியே புள்ளி புள்ளியாய்த் தெரியும்.'

*3.* 'உங்கள் முடி ரொம்ப வளர்ந்துவிட்டது இல்லை?'

*4.* 'வண்டியை நிறுத்த அதோ அங்கே இடம் இருக்கிறது திருப்புங்கள்.'

*5.* 'சிநேகிதர்களுடன் பேசிக்கொண்டிருக்கப் பிடிக்கிறது. என்னையும் கவனியுங்களேன்.'

*6.* 'ஏன் இத்தனை வேலையை இழுத்துப்போட்டுக் கொள்கிறீர்கள்? ஒரு நாள் சும்மா இருங்கள்.'

*7.* 'அதை அங்கே வைக்காதீர்கள், காணாமல் போய் விடும்.'

*8.* 'குழாய் ரிப்பேர் ஆளைக் கூப்பிடுங்கள். என்ன செய்ய வேண்டுமென்று அவனுக்குத் தெரியும்.'

*9.* 'இந்த ஓட்டலில் உட்காரவே இடமில்லை. முன்னாடியே ஃபோன் பண்ணி விசாரித்திருக்க வேண்டும்.'

*10.* குழந்தைகளுடன் அதிக நேரம் பேசி விளையாடக் கூடாதா? ஏங்கிப் போகிறார்கள், பாவம்.'

*11.* 'உங்கள் அறை ஒரே கந்தல் கோளமாய் இருக்கிறது. எப்படி உங்களால் இங்கே வேலை செய்ய முடிகிறது? எப்போது ஒழுங்கு பண்ணப் போகிறீர்கள்?'

*12. 'நான் சொன்னதை எடுத்துவர மறுபடியும் மறந்து விட்டீர்கள். கண்ணில் படுகிற மாதிரி முதலிலேயே அதை எடுத்து வைத்துக் கொள்ளக்கூடாதா?'*

*13. 'ரொம்ப வேகமாய் ஓட்டுகிறீர்கள். போலீஸ்காரன் பிடித்துக் கொள்வான். மெதுவாய்ப் போங்கள்.'*

*14. 'அடுத்தத் தடவை சினிமாவுக்குக் கிளம்புவதற்கு முன், படம் நன்றாயிருக்கிறதா என்று நாலு பேரைக் கேட்டுத் தெரிந்துகொண்டு கிளம்ப வேண்டும்.'*

*15. 'நீங்கள் எங்கே போயிருந்தீர்கள் என்பதே தெரிய வில்லை. போன இடத்திலிருந்து ஒரு ஃபோன் பண்ணக் கூடாதா?'*

*16. 'யாரோ காப்பி சாப்பிட்டுவிட்டு டம்ளரைக் கழுவாமலே வைத்திருக்கிறார்கள்.'*

*17. 'விரலைச் சப்பாதீர்கள். குழந்தைகளுக்கும் அந்தக் கெட்டப் பழக்கம் வந்துவிடும்.*

*18. 'அந்த உருளைக்கிழங்கு வறுவல் ரொம்ப எண்ணெய். உங்கள் உடம்புக்கு ஆகாது.'*

*19. 'முன்னாடியே சொல்வதற்கு என்ன? போட்டதைப் போட்டபடி விட்டுவிட்டு உங்களுடன் சினிமாவுக்கு வர முடியுமா?*

*20. 'உங்கள் ஷர்ட்டுக்கும் பாண்ட்டுக்கும் பொருத்த மாக இல்லை.'*

*21. 'உங்கள் சிநேகிதர் மூன்று தடவை போன் பண்ணி விட்டார். நீங்கள் எப்போது ஃபோன் பண்ணப் போகிறீர் கள்?'*

*மனைவிமார்களே, கவனியுங்கள்: அடுத்த ஒரு வாரத்திற்கு மேற்கண்ட மாதிரி கணவரைக் குறை சொல்*

லாதீர்கள். அவர் கேட்காதபோது எந்த யோசனையும் கூறாதீர்கள்.

கணவன்மார்களே, கவனியுங்கள்: அடுத்த ஒரு வாரத்திற்கு, மனைவி எப்போது பேசினாலும் காது கொடுத்துக் கேளுங்கள். 'இதற்கு நான் ஒரு வழி சொல்கிறேன்' என்று சொல்லத் தோன்றும்போதெல்லாம் நாக்கைக் கடித்துக்கொண்டு அடக்கிக் கொள்ளுங்கள்.

இரண்டு பேருமே தாங்கள் வெவ்வேறு கிரகத்திலிருந்து வந்த வெவ்வேறு குணாதிசயம் கொண்டவர்கள் என்ற கற்பனையை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்.

ஆண்களுக்கு, மனசுக்குள் ஓர் உறுத்தலோ, பிரச்சினையோ, பூசலோ ஏற்பட்டிருக்கும். இன்னோர் ஆணிடம் தங்கள் பிரச்சினையைச் சொல்லி அவர்களுக்குத் தலைவலி தரமாட்டார்கள். ரொம்ப நெருங்கிய நண்பராக இருந்து, அவருடைய உதவியைப் பெறுவது நல்லது என்று தோன்றும்போது மட்டுமே சொல்வார்கள். மற்றபடி தங்களுக்கென்று ஒரு குகை வைத்திருப்பார்கள். அதற்குள்ளே புகுந்துகொண்டு விடுவார்கள். தங்கள் பிரச்சினையை அலசி ஆராய்ந்து தீர்வு கண்ட பிறகுதான் அந்தக் குகையைவிட்டு வெளியே வருவார்கள். அப்போது அவர்கள் அகமும், முகமும் மலர்ந்திருக்கும்.

தீர்வு கண்டுபிடிக்க முடியவில்லையென்றால், பிரச்சினையை மறந்திருப்பதற்காக பேப்பர் படிப்பார்கள், டி.வி. பார்ப்பார்கள். ரொம்ப பெரிய பிரச்சினையாக இருந்தால் காரை வேகமாக ஓட்டுவார்கள், போட்டிகளில் கலந்து கொள்வார்கள். ஏன், மலை ஏறக்கூட முயல்வார்கள்.

பெண் எப்படி?





6

# பெண்: குகைக்கு வெளியே —

பெண்களைப் பொறுத்தமட்டில், ஒரு பெண் தன் பிரச்சினையை இன்னொரு பெண்ணிடம் பகிர்ந்து கொள்கிறாள் என்றால் அந்த மற்றவளிடம் அவள் கொண்டுள்ள அன்புக்கு அடையாளம், நம்பிக்கைக்கு அடையாளம். மற்றவளுக்கு அது சுமையாக இருக்கு மென்று நினைப்பதில்லை. பிரச்சினைகள் இருப்பதை ஓர் அவமானமாக பெண்கள் கருதுவது கிடையாது. தங்கள் பிரச்சினைகளைத் தாங்களே தீர்த்துக்கொள்ள வேண்டு மென்ற அகங்காரம் அவர்களிடம் இல்லை. உறவுகள் அன்போடு அமையவேண்டும் என்பதையே முக்கியமாக நினைக்கிறார்கள். கைக்கு மீறியதாக ஒன்று நேரும்போது, குழப்பம் ஏற்படும்போது, நம்பிக்கை இழக்கும்போது, களைத்துப் போகும் எந்தப் பெண்ணும் தன் உணர்ச்சி களை மற்றொரு பெண்ணிடம் பகிரங்கமாகச் சொல்

*வதற்குத் தயங்குவது கிடையாது. அப்படி உணர்ச்சி களையும், பிரச்சினைகளையும் பகிர்ந்து கொள்ளக்கூடிய பிரியமுள்ள தோழிகள் இருந்தால் அவள் சந்தோஷப் படுகிறாள்.*

*ஆண்கள் அப்படியல்ல. தன் குகைக்குள் புகுந்து கொண்டு தன் பிரச்சினையைத் தானே தீர்த்துக் கொள்ளும்போதுதான் அவனுக்கு சந்தோஷம். ரொம்ப அவசரமான அல்லது ரொம்ப கஷ்டமான பிரச்சினையை மூட்டை கட்டி எடுத்துக்கொண்டு, தான் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் குகைக்குள் புகுந்து கொள்கிறான். அந்தப் பிரச்சினையை தீர்ப்பது ஒன்றுதான் அவனுக்குக் குறி. அதுவரையில் மற்றதெல்லாம் மறந்து போகிறது. மற்ற பிரச்சினைகள், மற்ற பொறுப்புகள் அத்தனையும் பின்னுக்குத் தள்ளப்பட்டு மங்கி மறைந்துவிடுகின்றன.*

*அதனால்தான் எந்த கணவனும் அம்மாதிரி சமயங் களில் மனைவியிடம் ஒதுங்கிப் போகிறான். மறதி உள்ளவனாக இருக்கிறான். அவள் கேட்பதற்கு பதில் சொல்வதில்லை. மனைவி பேசுவதில் ஐந்து சதவிகிதம் தான் அவன் மனசில் பதிகிறது. மற்ற தொண்ணூற்று ஐந்து சதவிகிதம் வேறெங்கோ இருக்கிறது.*

*வேடிக்கை என்னவெனில், மனைவியை அலட்சியப் படுத்துகிறோம் என்பதே அவனுக்குத் தெரியாது. அது மட்டுமல்ல; 'நான் சரியாகத்தானே இருக்கிறேன்!' என்று மனைவியிடம் வாக்குவாதம் வேறே செய்வான். உதாரணமாக, விவாதம் ஏற்படும் சில சந்தர்ப்பங்களைப் பார்ப்போம்-*

*1. 'நான் பேசிக்கொண்டே போகிறேன். நீங்கள் காதிலேயே வாங்கிக்கொள்ளவில்லை' என்று மனைவி*

சொன்னால், 'நான் காதில் வாங்கிக்கொள்ளவில்லை என்று எதை வைத்துச் சொல்கிறாய்? நீ சொன்னது அத்தனையையும் அப்படியே திருப்பிச் சொல்கிறேன், பார்க்கிறாயா?' என்கிறான் கணவன்.

உண்மையில், அவன் தன் 'குகை'க்குள்ளே இருக்கும் போது, ஐந்து சதவிகிதக் கவனம்தான் இவளிடம் இருந்திருக்கும். பேசிய வார்த்தைகளைத் திருப்பி ஒப்பிக்க அந்த ஐந்து சதவிகிதம் போதும். தான் காது கொடுத்துக் கேட்டதற்கு அதுவே அடையாளம் என்று அவன் நம்புகிறான். ஆனால் மனைவிக்கு அது போதாது, அவன் கவனம் நூற்றுக்கு நூறு இருக்க வேண்டும் என்று அவள் எதிர்பார்க்கிறாள்.

2. 'நீங்கள் இங்கேயே இல்லை. வேறே எங்கேயோ இருக்கிற மாதிரி இருக்கிறது' என்று மனைவி சொன்னால், 'அபத்தமாய்ப் பேசாதே. நான் இங்கே தான் இருக்கிறேன். கல்லுக்குண்டு மாதிரி நான் உட்கார்ந்திருப்பது உன் கண்ணுக்குத் தெரியவில்லையா?' என்று கணவன் சொல்கிறான்.

தம் உடம்பு அங்கே இருக்கும்போது இல்லையென்று அவள் எப்படிச் சொல்லலாம் என்பது அவன் கேள்வி. ஆனால் அவன் முழு மனமும் அங்கே இல்லை என்பதை அவள் உணர்ந்திருப்பதால்தான் அந்த குற்றச்சாட்டு.

3. 'உங்களுக்கு என்னிடம் அக்கறை இல்லை' என்று மனைவி சொன்னால், 'ஏன் அப்படிச் சொல்கிறாய்? எனக்கொரு பிரச்சினை இருக்கிறது. அதைத் தீர்த்துக் கொள்ள மண்டையை உடைத்துக் கொண்டிருக்கிறேன். அது உன் மேலுள்ள அக்கறையினால்தானே?' என்கிறான் கணவன்.

தன் பிரச்சினையைத் தீர்த்துக்கொள்வது ஏதோ ஒருவகையில் அவளுக்கும் நன்மைதானே என்பது அவன் எண்ணம். ஆனால் கணவன் வேறெதிலும் கவனத்தைச் செலுத்தாமல் தான் சொல்வதைக் கேட்க வேண்டும் என்பதே மனைவியின் விருப்பம்.

4. 'நீங்க பாட்டுக்கு மண்டைக்குள் எதையோ போட்டுக் குழப்பிக்கொண்டிருக்கிறீர்கள்' என்று மனைவி சொன்னால், 'ஏன்? அதிலென்ன தப்பு? என் பிரச்சினையை வேறு எப்படித் தீர்த்துக் கொள்ள முடியுமென்று நினைக்கிறாய்?' என்கிறான் கணவன்.

ஒரு முக்கியமான பிரச்சினையை பற்றி தான் கவலைப்பட்டுக் கொண்டிருக்கும்போது இவள் இப்படிக் குற்றம் சாட்டுகிறாளே என்று கணவன் எரிச்சல் கொள்கிறான். தனது உழைப்பை அவள் பாராட்ட வில்லை என்று வருத்தம் கொள்கிறான்.

பெண்ணின் குணம் என்னவெனில், ஒரு குறிப்பிட்ட பிரச்சினையில் கவனம் செலுத்தி அதைத் தீர்ப்பதை விட்டுவிட்டு ஒரே சமயத்தில் பல பிரச்சினைகளைப் பற்றிப் பேசுகிறாள். அதில் அவளுக்குத் தனித் திருப்தி. கடந்த காலத்தில் வந்த பிரச்சினை, எதிர்காலத்தில் வரக்கூடிய பிரச்சினை, முக்கியமான பிரச்சினை, அற்பமான பிரச்சினை எல்லாம் அவளுக்கு ஒன்றுதான், சில சமயம் தீர்க்கவே முடியாத பிரச்சினைகளைக் கூடச் சொல்வாள்.

'ஆபீசில் எனக்குத் தருகிற சம்பளம் பற்றாது. என் மாமிக்கு உடம்பு மேலும் மோசமாகிக்கொண்டிருக் கிறது. இன்னும் பெரிய வீடாக இருந்தால் நன்றா யிருக்கும். வெயில் கொளுத்துகிறது. எப்பத்தான் மழை

பெய்யுமோ?' - இப்படியெல்லாம் மனைவி சொல்லும் போது, 'இதற்கு நான் என்ன செய்ய முடியும்?' என்று கணவன் விழிக்கிறான்.

இருந்தாலும், மனைவி தன் உணர்வுகளைச் சொல்லும்போது அதைச் சரியாக அர்த்தம் செய்து கொண்டு, அவளுக்கு ஆதரவு காட்ட வேண்டியது கணவனின் கடமை. அதேபோல், கணவன் தன் உணர்ச்சிகளைச் சொல்லாமல் மௌனமாக இருக்கும் போது அதைச் சரியாக அர்த்தம் செய்துகொண்டு ஆதரவு காட்ட வேண்டியது மனைவியின் கடமையாகும். இருவருக்குமே இது ஒரு சவாலான சமாசாரம்தான் என்றாலும், மனைவிகள்தான் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். ஏனெனில் ஆண் மௌனமாக இருப்பதைப் பெண்தான் தப்பாக எடுத்துக் கொள்கிறாள். காலையில் கலகலப்பாக இருந்துவிட்டு மாலையில் திடீரென்று மௌனமாகி விடுவது ஆணுக்கு சகஜம். பெண்ணினால் இதைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. அன்பாக இருப்பதாக எண்ணிக்கொண்டு, 'என்ன ஆயிற்று? ஏன் என்னவோ போல் இருக்கிறீர்கள்?' என்று திரும்பத் திரும்பக் கேட்கிறார்கள். அவனுடைய பிரச்சினையை அவனே தீர்த்துக்கொள்ளட்டும் என்று விட்டுவிட்டால் பல உரசல்களைத் தீர்க்கலாம்.

பான்னியை நான் மணந்துகொண்ட புதிதில் அவள் அப்படித்தான் இருந்தாள். மறுநாள் காலை நான் லெச்சருக்காக வெளியூர் போக வேண்டியிருக்கிற தென்று சொன்னால், 'எத்தனை மணிக்கு எழுந்திருக்கப் போகிறேன்' என்று கேட்பாள். பிறகு 'விமானம் எத்தனை மணிக்கு' என்று கேட்பாள். பிறகு மனசுக்குள் ஒரு கணக்குப் போட்டுப் பார்த்து, 'அப்படியானால்

விமானத்தைப் பிடிக்க எனக்கு நேரம் இருக்காது' என்று சொல்லுவாள். ஒவ்வொரு முறையும் எனக்கு ஆதரவாக, அனுதாபமாக, பிரியமாக இருப்பதாகத்தான் அவள் நினைப்பு, ஆனால் எனக்கு அது உறுத்தலாக இருக்கும். பதினாறு வருட காலமாக உலகின் பல்வேறு மூலைகளுக்குச் சென்று லெக்சர் கொடுத்திருப்பவன் நான். ஒரு முறைகூட எந்த விமானத்தையும் தவறவிட்டது கிடையாது. எனக்குப்போய் அறிவுரை சொல்கிறாளே என்று கோபம் வரும்.

அது மட்டுமல்ல, நான் புறப்படும்போது 'டிக்கெட் எடுத்து வைத்துக் கொண்டீர்களா? பர்ஸ் எடுத்து வைத்துக் கொண்டீர்களா? எங்கே தங்கப்போகிறீர்கள்? அந்த விலாசத்தைக் குறித்து வைத்துக்கொண்டீர்களா?' என்று கேட்பாள். அப்படிக் கேட்பதுதான் என் மீதுள்ள அக்கறைக்கு அடையாளம் என்று அவள் நினைப்பு.

ஒரு நாள் அவளிடம் என்ன சொன்னேன் தெரியுமா?





# 7

# ‘கொஞ்சம் இரு’ மந்திரம்

**நா**ன் வெளியூருக்குப் புறப்படும் போதெல்லாம், ‘இதை எடுத்து வைத்துக் கொண்டீர்களா? அங்கே போன் பண்ணி னீர்களா?’ என்று என் மனைவி என்னை நச்ச ரித்துக் கொண்டேயிருப்பாள். என் மீதுள்ள பிரியம் தான் அதற்குக் காரணம். ஆனால் என்னிடம் அவளுக்கு அவநம்பிக்கை என்றெண்ணி நான் எரிச்சல் பட்டேன்.

ஒரு நாள் அவளிடம் சொன்னேன்: ‘‘இதோ பார், நீ எனக்கு அம்மாவாக இருக்க நினைக்கிறாய், இரு. ஆனால் நிபந்தனையற்ற பிரியம் காட்டும் அம்மாவாக - என்னிடம் நம்பிக்கை வைத்த அம்மாவாக இரு. நான் தாமதமாக புறப்பட்டு விமானத்தைத் தவறவிட்டேன் என்றால், ‘நான் அப்பவே சொன்னேன்’ என்று சொல்லாதே! அந்தத் தவறை நான் ஒரு பாடமாக எடுத்துக்கொள்வேன். அடுத்த முறை எச்சரிக்கையாக நடந்து கொள்வேன். டூத் பிரஷையோ, ஷேவிங் சாமான்களையோ நான் எடுத்துப் போக மறந்துவிட்டால், எப்படியோ திண்டாடிடச் சமாளித்துக் கொள்வேன். நான் ஃபோன் பண்ணினால் அதைச் சொல்லிக் குத்திக் காட்டாதே.’’

இப்படி நான் சொன்னதை என் மனைவி ஏற்றுக் கொண்டாள். தான் விரும்புவதை நான் செய்ய வேண்டும் என்று எண்ணுவதைக் கைவிட்டு, நான் விரும்புகிறபடி - நான் செய்துகொள்ளும்படி விட்டுவிட்டாள். அதன்பின் என்னை நச்சரிக்காமல் இருப்பது தனக்கும் சௌகரியமாக இருக்கிறது என்பதை உணர்ந்தாள்.

ஒரு முறை சொற்பொழிவுக்காக நான் ஸ்வீடனுக்குச் செல்ல வேண்டியிருந்தது. கலிஃபோர்னியாவிலிருந்து புறப்பட்டு நியூயார்க்கை அடைந்துவிட்டேன். அங்கே போன பிறகுதான் பாஸ்போர்ட்டை எடுத்துக் கொள்ள மறந்துவிட்டேன் என்பது தெரிந்தது. கலிஃபோர்னியா வுக்குப் போன் செய்து என் மனைவியிடம் விஷயத்தைச் சொன்னேன்.

'இப்படிப் பொறுப்பில்லாமல் நடந்து கொள் கிறீர்களே?' என்று பான்னி எனக்கு லெக்சர் அடிக்க வில்லை. அற்புதமான பிரியத்துடன், அழகாக எடுத்துக் கொண்டாள். ''ஓ ஜான்! உங்களுக்குத்தான் எவ்வளவு சுவாரஸ்யமான அனுபவங்கள்!'' என்று சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு, 'என்ன செய்யப் போகிறீர் கள்?' என்று கேட்டாள்.

ஸ்வீடன் தூதரகத்திற்கு என் பாஸ்போர்ட்டை ஃபேக்ஸ் செய்து அனுப்பும்படி சொன்னேன். அவளும் அப்படியே செய்தாள். பிரச்சினை தீர்ந்தது. இப்படித்தான் ஒவ்வொரு முறையும் அவள் ஒத்துழைக்கிறாள். பொறுப்பாக நடந்து கொள்வதைப்பற்றி லெக்சரடிக்க அவள் ஆசைப்படுவதே கிடையாது. மாறாக, என் பிரச்சினையை நானே தீர்த்துக் கொள்வது பற்றி அவளுக்குப் பெருமை.

சில சமயம் பிரச்சினை இல்லாதபோதுகூட, பிரச்சினை இருப்பதுபோல நாம் பேசுகிறோம். அல்லது நடந்து கொள்கிறோம்.

என் குழந்தைகள் என்னிடம் ஏதாவது உதவி கேட்டால், உடனே, 'நோ பிராப்ளம்' என்று சொல்வது என் வழக்கம். 'சந்தோஷமாக உதவி செய்கிறேன்' என்பதைத்தான் அப்படிக் குறிப்பிட்டு வந்தேன்.

ஒரு நாள் என் பெண் ஜூலி, 'ஏனப்பா எப்போதும் நோ பிராப்ளம் என்று சொல்கிறீர்கள்? பிராப்ளம் என்று நான் எதுவும் சொல்லவில்லையே!' என்று கேட்டாள்.

என்ன பதில் சொல்வதென்று அப்போது எனக்குத் தெரியவில்லை.

புரிந்தது.

பிறகு யோசித்துப் பார்த்தேன். 'பிரச்சினையோ, பிராப்ளமோ, நான் வழி சொல்கிறேன்' என்று சொல்வது ஆண்களின் குணம். அப்படித்தான் நான் 'நோ பிராப்ளம்' என்று சொல்லி வந்திருக்கிறேன்.

இதை உணர்ந்ததும் அந்த வார்த்தையை உபயோகப் படுத்துவதை விட்டுவிட்டேன். உதவி கேட்டால், 'ஓ, சந்தோஷமாய்ச் செய்கிறேன்' என்று சொல்ல ஆரம்பித்தேன். நான் நிஜமாகவே சந்தோஷத்துடன் உதவி செய்வேன் என்பது என் மகளுக்குப் புரிந்தது. என் மீது அவளுக்குப் பிரியம் அதிகரித்தது. அவளும் பெண்தானே? ஆண்கள் இப்படி இருப்பதுதான் அவளுக்கும் சந்தோஷம்.

ஆணும், பெண்ணும் தங்கள் உறவுகளை செழுமைப் படுத்திக் கொள்வதற்கான ரகசியம் மேலே சொன்ன

உதாரணத்தில் இருக்கிறது. பிறவியோடு வந்த குணம் ஆணுக்கும் உண்டு. பெண்ணுக்கும் உண்டு. அந்த அடிப்படைக் குணங்களை அவர்கள் தலைகீழாக மாற்றிக் கொள்ளத் தேவையில்லை. அதற்குப் பதில் சின்னச் சின்ன மாறுதல்களைச் செய்துகொள்ளலாம். 'நோ பிராப்ளம்' என்பதை 'சந்தோஷமாகச் செய்கிறேன்' என்று மாற்றிக் கொண்ட மாதிரி. அதை விட்டு தலைகீழான மாற்றங்கள் நடக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பது, நம்முடைய உண்மையான குணத்தை அமுக்குவதில்தான் முடியும். அமுக்குவது, வாக்கு வாதத்தில் முடியும்.

ஆண் - பெண் உறவில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் இந்த வாக்குவாதம்தான்.

அபிப்பிராய பேதங்கள், சாதாரணப் பேச்சாக, அல்லது சாதாரண விவாதமாக ஆரம்பித்து, வாக்கு வாதமாக வளர்வதைப் பார்த்திருப்பீர்கள். அது இன்னும் கொஞ்சம் பெரிதாகி, சண்டை சச்சரவாக உருவெடுக்கிறது. பிரியமாகப் பேசிக்கொண்டிருந்தது போய், திடீரென்று பேச்சு வார்த்தையே நின்றுவிடுகிறது. மற்றவர் மீது பழி சுமத்தி, குற்றம் சாட்டி, புகார் செய்து, பிடிவாதம் பிடித்து, வெறுப்படைந்து, சந்தேகப்பட்டு - மற்றவர் மனசைப் புண்படுத்துகிறோம். மிக நெருக்கமானவராக இருக்க இருக்க அவரைப் புண்படுத்துகிறோம். அல்லது அதனால் புண்படுகிறோம்.

வாக்குவாதம் ஆரம்பிப்பது என்ன சொல்கிறோம் என்பதில் இல்லை அதை எப்படிச் சொல்கிறோம் என்பதில்தான் இருக்கிறது.

எதிர்ப்பாக ஒரு வார்த்தை சொன்னதுமே கணவன் சிலிர்த்துக் கொள்கிறான். தன் கட்சி சரியானது என்பதை

நிரூபிப்பதிலேயே அவனுடைய முழுக் கவனமும் செல்கிறது. தானொரு பிரியமான கணவன் என்பதை மறந்து பேசத் தொடங்குகிறான். குரலில் அன்பும், அக்கறையும் குறைந்துவிடுகிறது.

இம்மாதிரி சந்தர்ப்பங்களில், அற்பமான கருத்து வேற்றுமை கூட, தன் மீது தொடுக்கும் தாக்குதலாக மனைவிக்குத் தோன்றுகிறது. வேண்டுகோளாகச் சொல் வதைக் கூடக் கட்டளை பிறப்பிப்பதாக எடுத்துக் கொள்கிறாள். மற்ற சமயமானால் அவன் சொல்வதில் உள்ள நியாயத்தை ஒப்புக்கொள்வாள். ஆனால் இப்போது? கணவனின் அன்பின்மையைக் கண்டதும் எதிர்ப்புக் காட்ட நினைக்கிறாள்.

நாம் என்ன சொல்கிறோம் என்பதைப் பொறுத்தில் லாமல், எப்படிச் சொல்கிறோம் என்பதைப் பொறுத்துத் தான் வாக்குவாதம் எழுகிறது என்பதை ஞாபகம் வைத்துக் கொண்டால் போதும்.

வாக்குவாதம் ஆரம்பிப்பதற்குத்தான் இரண்டு பேர் தேவை - நிறுத்துவதற்கு ஒருத்தரே போதும். முளையி லேயே கிள்ளிவிட்டால் வாக்குவாதம் நின்றுவிடும்.

அதற்கு என்ன செய்ய வேண்டும்?

கணவனும் சரி, மனைவியும் சரி, கருத்து வேற்றுமை யில் சூடு ஏற ஆரம்பித்ததும், அதற்குப் பொறுப்பு நாம்தான் என்று ஒப்புக் கொள்ளுங்கள்.

உடனே பேச்சை நிறுத்திக் கொள்ளுங்கள். 'கொஞ்சம் இரு' என்று (அல்லது 'கொஞ்சம் இருங்கள்' என்று) சொல்லிவிட்டு, சிறிது நேரம் வெளியே செல்லுங்கள். நாம் பேசிய முறை சரிதானா என்று சற்று யோசனை

பண்ணிப் பாருங்கள். மற்றவரின் கட்சி என்ன என்பதைப் புரிந்துகொள்ள முயலுங்கள்.

கொஞ்ச நேரம் சென்றபின் திரும்பி வாருங்கள். பேசத் தொடங்குங்கள், ஆனால் இந்தத் தடவை பிரியமாக; மற்றவரின் கருத்துக்கு மதிப்புக் கொடுத்து,

இந்தக் 'கொஞ்சம் இரு' மந்திரத்திற்கு மகிமை நிறைய உண்டு. எப்படி என்பதைப் பார்ப்போம் —







# 8

## சண்டை எப்படி வருகிறது?

'**கொ**ஞ்சம் இரு' என்று சொல்லிவிட்டுக் கொஞ்ச நேரம் வெளியே சென்று அமைதியாகச் சிந்தித்து விட்டுத் திரும்பினால் எந்த வாக்குவாதமும் வளராது, நின்றுவிடும். ஆனால் ஆணாகட்டும், பெண்ணாகட்டும் அப்படிச் செய்வதில்லை. வாக்குவாதத்தை நிறுத்துவதாக நினைத்துக்கொண்டு வேறு வழிகளைக் கையாளுவார்கள். எல்லாம் நல்லெண்ணத்தோடுதான்.

அந்த வழிகளில் ஒன்று போலித்தனம். இது பெரும்பாலும் பெண்களிடம்தான் காணப்படுகிறது. மனத்தாங்கல் வராமல் தடுப்பதற்காக, பிரச்சினையே இல்லை என்று போலிப் பாசாங்கு செய்கிறார்கள். முகத்தில் புன்சிரிப்பைத் தவழவிட்டுக் கொண்டு, கணவன் சொல்வதெல்லாம் சரிதான் என்று ஒப்புக் கொண்டுவிட்ட மாதிரியும், தாங்கள் ரொம்ப சந்தோஷ மாக இருக்கிற மாதிரியும் நடிக்கிறார்கள் இவர்கள்.

ஆனால், நேரம் ஆக ஆக, அவர்களுக்குள் எதிர்ப் புணர்ச்சிகள் ஏற்பட்டு வலுவடைகிறது. காரணம், தாங்கள் இவ்வளவு விட்டுக் கொடுத்தும் கணவனிடம் பதிலுக்கு எந்த மாறுதலையும் காணோமே என்ற கசப்புதான். இந்தக் கசப்பு அவர்களுடைய இயல்பான பிரியத்தைப் பாதிக்கிறது. 'ஓகே, ஆல்ரைட், ஃபைன்!' என்று இவர்கள் சொல்வதெல்லாம் வீணாகிறது. இதே வார்த்தையை ஆண்களும் சொல்வதுண்டு. ஆனால், 'நான் ஓகே. என் பிரச்சினையை நானே தீர்த்துக்கொள்வேன். நான் ஆல்ரைட்' என்ற அர்த்தத்தில் உண்மையாக சொல் கிறார்கள். பெண்கள் அப்படியல்ல. ஓகேயாக இல்லாத போது, ஆல்ரைட்டாக இல்லாதபோது, ஃபைனாக இல்லாதபோது அவ்வாறு சொல்வதால் தங்கள் உணர்ச்சி களையும், தேவைகளையும், விருப்பங் களையும் பலி கொடுத்துக் கொள்கிறார்கள்.

ஆணைப் பொறுத்தமட்டில் அபிப்பிராய பேதங்களும், கருத்து மோதல்களும் அவனுக்கு ஒரு சவால். மனைவி யிடம் அன்பு அதிகமாக இருக்க இருக்க, அவளுடன் வாக்குவாதம் ஏற்படாமல் தவிர்ப்பது அவனுக்கு அதிகக் கஷ்டமாக இருக்கிறது, அவன் செய்த காரியம் ஏதேனும் அவளுக்குப் பிடிக்கவில்லையென்றால் உடனே அவ ளுக்குத் தன் மீது பிரியம் கிடையாது என்று முடிவு செய்துவிடுகிறான்.

இப்படியே, கணவன் சொல்வதை மனைவியும், மனைவி சொல்வதைக் கணவனும் தப்பாமல் எடுத்துக் கொள்கிறார்கள். உதாரணத்திற்கு ஒரு நிகழ்ச்சியைச் சொல்கிறேன்.

அது ஓர் இனிமையான மாலை நேரம். நானும் என் மனைவியும் பிக்னிக் சென்றிருந்தோம். மனோகரமான

இடத்தில் உட்கார்ந்து, எடுத்துப் போயிருந்த சிற்றுண்டி களைச் சுவைத்துச் சாப்பிட்டு, சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்தோம். பிறகு இருவரும் கொஞ்ச தூரம் 'வாக்கிங்' சென்றோம். எல்லாம் ஆனந்தமாக இருந்த சமயம் —

நான் செய்வதாக இருந்த சில முதலீடுகளைப் பற்றி மனைவியிடம் பேச்செடுத்தேன். சேமிப்பிலிருக்கும் பணத்தை பிஸினஸில் போடுவது அவளுக்குப் பிடிக்க வில்லை.

அப்படி ஒரு யோசனை இருக்கிறது என்று சொன்ன தாகத்தான் நான் நினைத்துக்கொண்டேன்.

அவளோ, பிஸினஸில் ஈடுபட நான் முடிவு செய்து விட்டேன் என்றே நினைத்துவிட்டாள். அதுவும் தன் னிடம் ஒரு வார்த்தைக்கூடச் சொல்லாமல் தீர்மானித்து விட்டேன் என்று கோபம்.

இப்படி அவள் கோபப்படுகிறாளே என்று எனக்குக் கோபம் வந்தது. விளைவு? வாக்குவாதம்.

எந்த பிஸினஸில் பணம் முதலீடு செய்யலாம். எதில் செய்யக்கூடாது என்று இவள் ஆட்சேபம் சொல்கிறாளே என்று எனக்கு வருத்தம். ஆனால் இவள் என் மீது கோபப்படுகிறாளே என்பதால் என் கோபம் வளர்ந்தது.

சந்தேகமான பிஸினஸில் முதலீடு செய்வது சரிதானா என்பது அவள் கட்சி. இந்த பிஸினஸின் சாதக பாதங் களைப் பற்றி அவளுடைய எண்ணங்களைத் தெரிந்து கொள்ளாமல் காரியத்தில் இறங்கிவிட்டேன் என்று கோபம். அத்துடன்கூட, கோபப்படுவதற்கு அவளுக்கு உரிமை இருக்கிறது என்பதை நான் ஒப்புக் கொண்டு

அதற்கு மதிப்புக் கொடுக்கவில்லை என்று இன்னும் கோபம். இறுதியில் என் சினம் அதிகமாகி விட்ட தென்பதை அறிந்து அவள் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள். என்னைத் தப்பாகப் புரிந்து கொண்ட தற்காகவும், என்னிடம் நம்பிக்கை வைக்காத தற்காகவும் தான் வருத்தப்படுவதாகச் சொன்னாள். ஒரு வழியாய் இருவரும் நிதானத்திற்கு வந்தோம்.

கொஞ்சம் நேரம் கழித்து, இரண்டுபேரும் சமாதானம் அடைந்த பின்னர் என் மனைவி சொன்னாள்: ''நமக்குள் வாக்குவாதம் ஏற்படும்போதெல்லாம் நான் ஒன்று கவனிக்கிறேன். ஏதாவதொரு விஷயத்தில் எனக்குக் கோபம் வருகிறது. நான் கோபம் கொள்கிறேன் என்பதால் உங்களுக்குக் கோபம் வருகிறது. கடைசியில் உங்களுக்குக் கோபமூட்டியதற்காக நான் உங்களிடம் மன்னிப்புக் கேட்கும்படி நேரிடுகிறது. இது அவ்வளவு சரியில்லை. நான் ரொம்ப மனவருத்தம் கொள்ளும்படி செய்ததற்காக நீங்கள் ஸாரி சொன்னால் நன்றாயிருக்குமே?''

அவள் பேச்சில் உள்ள நியாயத்தை நான் அக்கணமே உணர்ந்துகொண்டேன். முதலில் அவள் கோபப்படும்படி செய்துவிட்டு, பிறகு அவள் என்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டுமென்று எதிர்பார்ப்பது முறையாகாது என்பது புரிந்தது. இந்த ஞானம் எங்கள் உறவை முற்றிலும் மாற்றிவிட்டது. பற்பல சொற்பொழிவுகளில் இந்த அனுபவத்தைச் சொன்னேன். என் மனைவி நினைத்தது போலவே ஆயிரக்கணக்கான மனைவிமார்கள் நினைக் கிறார்கள் என்பது அப்போது தெரியவந்தது. கணவ னுக்கும், மனைவிக்கும் பூசல் ஏற்படுவது பொதுவாகவே இப்படித்தான் —

எப்படியெனில்-

1. 'எக்ஸ்' என்ற நபரிடம் தனக்குக் கோபம் என்று மனைவி சொல்கிறாள்.

2. உடனே கணவன் 'எக்ஸ்' மீது அவள் கோபம் கொள்வது சரியல்ல என்று சொல்லத் தொடங்குகிறான்.

3. தான் சொன்னதைக் கணவன் ஏற்றுக் கொள்ள வில்லை என்று மனைவி கோபம் கொள்கிறாள். ('எக்ஸ்' மீதுள்ள கோபத்தைவிட, கணவன் தான் சொன்னதை ஒப்புக்கொள்ளவில்லையே என்ற கோபம் அதிகமாக இருக்கிறது!)

4. மனைவி தன் பேச்சை ஒப்புக்கொள்ளவில்லை என்பதால் கணவன் கோபமடைகிறான். தனக்கு கோப மூட்டியதற்காக அவள் மீது கோபம்கொண்டு அவள் மன்னிப்புக் கேட்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறான். அவள் மன்னிப்புக் கேட்கிறாள். ஆனால் இந்த மனிதன் கோபம் கொள்ளுமளவுக்கு, தான் மன்னிப்புக் கேட்கு மளவுக்கு என்னதான் நடந்துவிட்டது என்று அவளுக்குப் புரியவில்லை. அதை நினைக்க நினைக்க அவளுக்குக் கோபம் அதிகரிக்கிறது. சாதாரண வாக்குவாதம் சண்டை யில் முடிகிறது.

இந்தச் சண்டையை முளையிலேயே கிள்ளிவிட முடியும்.

எப்படி?





9

# ஒரு 'ஸாரி' பல அற்புதம்!

கணவனுக்கும் மனைவிக்குமிடையே வாக்கு வாதங்கள் எப்படி முளைத்து எப்படி வளர்கின்றன. என்பதை நான் தெளிவாகப் புரிந்துகொண்டேன். நியாயமான முறையில் அந்தப் பிரச்சினையைத் தீர்க்கும் வழியையும் மேற்கொண்டேன். அவள் கோபப்படுகிறாள் என்பதால் நானும் கோபப்படுவது என்ற பழக்கத்தை மாற்றிக் கொண்டேன். மாறாக, எதனால் அவளுக்குக் கோபம் ஏற்பட்டது என்பதைப் புரிந்து கொள்ள முயன்றேன். எனக்கு அவள் மீது பிரியம் உண்டு என்பதை வெளிப் படுத்தினேன். அவள் என்னைத் தப்பாகப் புரிந்துகொண்டு கோபப்பட்டிருந்தால்கூட, 'ஸாரி' சொன்னேன். ஆண்களைப் பொறுத்த மட்டில், 'ஸாரி' என்று சொன்னால் ஏதோ தவறு செய்து விட்டதை ஒப்புக்கொள்வது போலவும், அதற்காக மன்னிப்புக் கேட்பது போலவும் எண்ணுகிறார்கள். பெண்கள் அப்படி அல்ல. 'ஸாரி' என்று

சொன்னால் உங்கள் மீது எனக்குக் கொள்ளைப் பிரியம் என்பதை அப்படி மனப்பூர்வமாகக் குறிப்பிடுகிறார்கள். தப்புப் பண்ணிவிட்டு மன்னிப்புக் கேட்பதாக நினைப்ப தில்லை. இதைப் படிக்கும் ஆண்கள், அடுத்த முறை வாக்குவாதம் ஏற்படும்போது 'ஸாரி' என்று சொல்லிப் பாருங்கள். அற்புதங்கள் விளையும்! மனைவி தன் உணர்ச்சிகளைச் சொல்லும்போது கணவன் சாதாரண மாகச் சொல்லும் வார்த்தைகூடத் தப்பாகப் போய்விடு கிறது. உதாரணமாக, ''சரி சரி, அதைப் பற்றி அலட்டிக் கொள்ளாதே'' என்று சொல்வதாக வைத்துக் கொள் ளுங்கள். ஆண்கள் அதைப் பிரியத்தோடு சினேகப் பூர்வமாகச் சொல்கிறான் என்று எடுத்துக் கொள்வார்கள். ஆனால் பெண்களுக்கு இது மனதைப் புண்படுத்தக்கூடிய பேச்சாகத் தோன்றும்.

பெண்களால் வாக்குவாதம் ஏற்படுவது வேறொரு வகையில்,

தங்கள் உணர்ச்சிகளை வெளிப்படையாக, நேரடியாகச் சொல்லமாட்டார்கள், ஒரு விஷயம் தங்களுக்குப் பிடிக்கவில்லை என்றாலோ, எதிலாவது தங்களுக்கு ஏமாற்றம் ஏற்பட்டிருந்தாலோ அதைக் கேள்வி வடிவத்தில் சொல்வார்கள்.

எடுத்துக்காட்டாக, கணவன் லேட்டாக வந்தா னென்றால், ''நீங்கள் எப்போது வருவீர்கள் என்று தெரியா மல் காத்துக் காத்து அலுத்துப் போய்விட்டேன்'' என்று சொல்லமாட்டார்கள். அல்லது 'என்னவோ ஏதோவென்று கவலைப்பட்டுப் போய்விட்டேன்' என்றும் சொல்ல மாட்டார்கள். 'ஏன்தான் இவ்வளவு லேட் பண்ணினீர் களோ?' என்பார்கள். அல்லது, 'இவ்வளவு லேட்டானால்

நான் என்னவென்று நினைத்துக் கொள்ளட்டும்' என் பார்கள். அல்லது, 'ஒரு ஃபோன் பண்ணக் கூடாதா?' என்பார்கள்.

'ஏன் ஃபோன் பண்ணவில்லை?' என்ற கேள்வியில் ஒரு தப்பும் இல்லைதான். ஆனால், அது நிஜமாகவே பதில் தெரிந்து கொள்வதற்காகக் கேட்கப்பட்ட நியாய மான கேள்வியாக இருந்தால் சரி. அப்படி இருக்காது. ஆனால் ஒரு பெண் கோபமாக இருக்கும்போது அவள் தொனியே மாறிவிடுகிறது. நிஜமாகப் பதில் தெரிந்து கொள்வதற்காக அவள் கேட்கவில்லை என்பதும், லேட்டாக வந்ததற்கு எந்தக் காரணம் சொன்னாலும் அவள் ஒப்புக்கொள்ளப் போவதில்லை என்பதும் அவள் குரலிலேயே தெரிந்துவிடுகிறது.

இப்படி ஒரு மனைவி கேட்கும்போது, கணவனுக்கும் அவளுடைய உண்மையான உணர்ச்சி புரிவதில்லை. அவள் தன்னைக் கண்டிக்கிறாள் என்று மட்டுமே நினைக்கிறான். பொறுப்பாக நடந்துகொள்ள வேண்டும் என்று அவள் தனக்குப் பாடம் சொல்வதாக எண்ணு கிறான். மனைவியின் தாக்குதலிலிருந்து தன்னைக் தற் காத்துக்கொள்ளும் வகையில் வாக்குவாதம் செய்யத் தொடங்குகிறான். தான் அவனுக்குப் கோபம் வரும்படி பேசிவிட்டோம் என்று மனைவி நினைப்பதே கிடை யாது.

கணவன் ஒன்று சொல்ல, மனைவி வேறொன்று அர்த்தம் செய்து கொள்வதையும், மனைவி ஒன்று சொல்ல கணவன் வேறொன்று எடுத்துக்கொள்வதும் பல சந்தர்ப் பங்களில் நிகழ்கின்றன. இரண்டொன்றைப் பார்க்க லாமா!

மனைவி கேட்பது: ஏன்தான் இப்படி லேட் பண்ணி னீர்களோ? நான் என்னவென்று நினைத்துக் கொள் ளட்டும்! ஒரு ஃபோன் பண்ணக் கூடாதா?

கணவன் அர்த்தம் செய்து கொள்வது: நீங்கள் லேட் பண்ணியதற்கு எந்த முகாந்தரமும் இல்லை. உங்களுக்குப் பொறுப்பு கிடையாது; அவ்வளவுதான். நானாக இருந்தால் லேட் பண்ணவே மாட்டேன். உங்களைக் காட்டிலும் நான் எவ்வளவோ மேல்.

லேட்டாக வந்த கணவன் விளக்கம் சொல்கிறான்: 'வருகிற வழியில் ஏகப்பட்ட போக்குவரத்து நெருக்கடி' என்கிறான். அல்லது, 'சில சமயம் நாம் நினைக்கிறபடி நடப்பதில்லை' என்கிறான். அல்லது, 'எப்பவுமே நான் டயத்துக்கு வர வேண்டும் என்று நீ நினைப்பது சரியில்லை' என்கிறான்.

மனைவி அர்த்தம் செய்து கொள்வது: 'லேட்டாய் வந்ததற்குச் சரியான, நியாயமான காரணம் இருக்கும் போது நீ எதற்காகக் கோபப்படுகிறாய்? எதுவானாலும் உன்னைக் காட்டிலும் என் வேலைதான் எனக்கு அதிக முக்கியம். ரொம்பத்தான் அதிகாரம் பண்ணாதே.'

கணவன் ஏதாவதொரு காரியத்தைச் செய்ய மறந்து விட்டானென்றால் மனைவி சொல்வது: 'எப்படித் தான் அதை மறந்தீர்களோ?' அல்லது, 'எப்போதுதான் உங்களுக்கு ஞாபகம் வரும்?' அல்லது 'உங்களை நம்பி எப்படி ஒரு வேலையை ஒப்படைப்பது?'

அவன் அர்த்தம் செய்துகொள்வது: 'மறந்ததற்கு ஒரு காரணமும் இல்லை. உங்களுக்கு அறிவு கிடையாது. உங்களை நம்ப முடியாது. உங்களுடன் குடும்பம் நடத்தி உருப்பட்டாற்போலத்தான்!'

தான் மறந்துபோனது ஏன் என்று அவன் விளக்கம் சொல்கிறான: 'நான் ரொம்ப பிஸியாய் இருந்தேன். அதனால் மறந்துவிட்டது. சில சமயம் இப்படித்தான் ஆகிவிடுகிறது' என்கிறான். 'சரி, இதென்ன பெரிய விஷயம்? இதனால் உன் மீது அக்கறை கிடையாது என்று அர்த்தமா?' என்கிறான்.

அவள் அர்த்தம் செய்துகொள்வது: 'ஏன் ஒன்று மில்லாததற்கெல்லாம் கோபப்படுகிறாய்? என்னை ஓட ஓட விரட்டுவதே உன் வேலையாகப் போய்விட்டது. அறிவுக்குப் பொருத்தமாய்ப் பேசு. பிரத்தியட்ச நிலைமையைப் பார். கற்பனை உலகத்தில் மிதக்காதே.'

இதே போல், அவன் வெளியே புறப்படுவதற்கு அவசரப்படும்போது - அது அவளுக்குப் பிடிக்காதபோது நடக்கும் வாக்குவாதத்தைக் கவனியுங்கள்:

அவள் சொல்கிறாள் : ஏன் எப்போது பார்த்தாலும் இப்படி அவசரப்படுத்துகிறீர்கள்? எங்கே போவதானா லும் இப்படித்தான் அடித்துப் பிடித்துக் கொண்டுதான் புறப்பட வேண்டுமா?

அவள் அர்த்தம் செய்துகொள்வது: 'இப்படி அவசரப் பட வேண்டிய தேவையே இல்லை. நான் சந்தோஷமாக இருந்தால் உங்களுக்குப் பிடிக்காது. உங்களை மாற்றவே முடியாது. எதற்கும் துப்பு இல்லாதவர் நீங்கள். என்னிடம் துளியும் உங்களுக்கு அக்கறை இல்லை!'

மனதில் இருப்பதை ஒரு பெண் ஒளிவு மறைவு இல்லாமல், சுற்றி வளைக்காமல், நேரடியாக சொன் னோமானால் பல தகராறுகள் முளைக்காது. ஆனால் மனைவி வெளிப்படையாகப் பேசுவதைக் கணவன்

சரியானபடி எடுத்துக்கொள்ள வேண்டும். நிதானத்துடன் யோசிக்க வேண்டும்.

ஒரு முறை நானும், என் மனைவியும் வெளியூருக்கு உல்லாசப் பயணம் கிளம்பினோம். நான் கார் ஓட்டிக் கொண்டிருந்தேன். அதற்கு முந்தின வாரம் பூரா இரண்டு பேருக்கும் ஓயாத வேலை. எல்லாம் முடிந்து, இப்போது ஆனந்தமாக வெளியே செல்கிறோம். ஆகவே என் மனைவி பான்னி வெகு சந்தோஷமாக இருப்பாள் என்று நினைத்திருந்தேன்.

ஆனால் அவள் என்ன சொன்னாள் தெரியுமா?

''வர வர வாழ்க்கை நரக வேதனையாக ஆகிக் கொண்டிருக்கிறது!'' என்றாள்.

எனக்கு எப்படி இருந்திருக்கும்!





# 10

## சந்தோஷமாம், சம்பாத்தியமாம்!

ஏற்பட்ட அதிர்ச்சியில் என்னால் சில விநாடிகளுக்குப் பேசவே முடியவில்லை. உல்லாசப் பிரயாணமாக, சந்தோஷத்துடன் வெளியூர் சென்று கொண்டிருப்பதாக நான் எண்ணிக் கொண்டிருக்கிறேன். என் மனைவி பான்னியோ, வாழ்க்கை நரக வேதனையாக இருக்கிறது என்றாள்!

உடனே என் அதிர்ச்சியை மறைத்துக்கொண்டு, ஒரு பெருமூச்சு விட்டேன். ''ஆமாம், பான்னி. நீ சொல்வது புரிகிறது. எனக்கும் சில சமயம் என்னை யாரோ ஒட்டப் பிழிந்தெடுக்கிற மாதிரிதான் இருக்கிறது'' என்று

சொன்னதோடு, ஈரத் துவாலையைப் பிழிகிற மாதிரி கையையும் முறுக்கிக் காட்டினேன்.

நான் சொன்னது சரிதான் என்பது போல அவள் தலையை அசைத்தாள். பிறகு-என்ன ஆச்சரியம்! அவள் திடீரென்று புன்னகை செய்தாள். வேறு விஷயங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள். இந்தப் பிரயாணத்தில் தனக்கு எத்தனை சந்தோஷம் என்று சொல்லத் தொடங்கினாள்.

சில வருடங்களுக்கு முன்பென்றால், இப்படி ஒரே விநாடியில் இந்த வாக்குவாதம் முடிந்து போயிருக்காது, வளர்ந்திருக்கும். 'வாழ்க்கை, நரக வேதனையாக இருப்பதாக நீ எப்படிச் சொல்லப் போயிற்று?' என்று நான் கோபமாகக் கேட்டிருப்பேன். அவள் என்னைத்தான் குற்றம் சாட்டுகிறாள் என்று தனிப்பட்ட முறையில் என் மீது ஒரு தாக்குதலாக எடுத்துக் கொண்டிருப்பேன். அவளுக்குப் பதில் சொல்ல ஆரம்பித்திருப்பேன். 'வாழ்க்கை ஒன்றும் நரகமாக இல்லை. இப்போது நாம் உல்லாசப் பயணம் போவது எத்தனை சந்தோஷமான விஷயம். இதற்காக நீ நன்றி உடையவளாக இருக்க வேண்டாமா?' என்று நீண்ட லெக்சர் அடித்திருப்பேன். அவள் பதில் சொல்லியிருப்பாள். இருவருக்கும் வாக்கு வாதம் முற்றியிருக்கும். அதன் பின்னர் உல்லாசமாவது, பிரயாணமாவது! அதுவும் நரக வேதனையாகப் போயி ருக்கும்.

அவள் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ளாதவனாக - அதற்கு மதிப்புக் கொடுக்காதவனாக நான் இருந்திருந்தால் இப்படியெல்லாம் நேர்ந்திருக்கும்.

ஆனால் இப்போது நான் அவளைப் புரிந்து கொண்டி ருப்பதால் அவ்வாறு எதுவும் நேரவில்லை. தற்காலிகமாக

அவள் மனத்தில் ஏதோ அலுப்பு ஏற்பட்டதால்தான் அப்படிச் சொன்னாள் என்பதை ஊகித்துக் கொண்டேன். என்னைக் குறை கூறுவது அவள் நோக்கமல்ல என்பதைப் புரிந்து கொண்டேன். ஆகவே வாக்குவாதம் செய்யாமல், எனக்கும் வாழ்க்கை சலிப்பாகத்தான் இருக்கிறது என்று சொன்னேன். அதன் மூலம் அவள் உணர்ச்சிக்கு மதிப்புக் கொடுத்தேன். பதிலுக்கு அவளும் என் மீது பரிவு கொண்டாள். பிரியம் காட்டினாள். எங்களுக்குள் வாக்கு வாதம் உண்டாக வில்லை.

மனைவியுடன் வாக்குவாதம் எழாமல் இருக்க வேண்டுமென்றால் கணவன்மாாகள் இன்னோர் உண்மை யையும் புரிந்துகொள்ள வேண்டும்.

பெண்களுக்கு சின்னப் பிரச்சினை, பெரிய பிரச்சினை என்ற வித்தியாசமெல்லாம் கிடையாது. இரண்டும் ஒரே மாதிரி முக்கியத்துவம் கொண்டதுதான். ரோஜாச்செடி பூக்காமல் இருக்கிறதே என்று எத்தனை கவலைப் படுவாளோ, அதே அளவு வீட்டு வாடகையைக் கொடுக்க முடியாதிருக்கிறதே என்றும் கவலைப்படுவாள். இந்த அடிப்படை உண்மையை உணராமல் ஒன்றுமில்லாததற் கெல்லாம் மனைவி அலட்டிக்கொள்கிறாள் என்று கணவன் நினைக்கும்போதுதான் சண்டை வருகிறது.

உதாரணமாக, பமீளா என்ற பெண்ணும், அவள் கணவன் சார்லஸும் என்னிடம் ஆலோசனைக்காக வந்ததைச் சொல்கிறேன்.

பமீளா கூறினாள் : ''நான் சார்லஸுக்காக எவ்வளவோ செய்கிறேன். இவர் எதுவும் செய்வதில்லை. வேலை, வேலை, வேலை. அது ஒன்றுதான் இவருக்குத் தெரியும்.''

*சார்லஸ் சொன்னான்: ''நான் வேலை செய்வதால் தான் பணம் கிடைக்கிறது. அதனால்தான் அழகான வீடு வாங்க முடிந்தது. நாலு ஊர்களுக்கு உல்லாசப் பயணம் போக முடிகிறது.''*

பமீளா : *''அழகான வீடும், உல்லாசப் பிரயாணங்களும் இருந்துவிட்டால் போதுமா? ஒருத்தர் மீது ஒருத்தருக்குப் பிரியம் இல்லாவிட்டால் என்ன இருந்து என்ன புண்ணியம்?''*

சார்லஸ் : *''நீ பேசுவதைப் பார்த்தால் என்னைவிட நீதான் குடும்பத்துக்காக அதிகமாகச் செய்கிற மாதிரி அல்லவா இருக்கிறது?''*

பமீளா : *''ஆமாம் அதிலென்ன சந்தேகம்? நீங்கள் செய்ய வேண்டிய வேலைகளையெல்லாம் நான்தான் செய் கிறேன். துணிமணிகள் துவைக்கிறேன், சமையல் செய் கிறேன். வீட்டைச் சுத்தம் பண்ணுகிறேன், கடை கண்ணிக்குப் போகிறேன். நீங்கள் செய்வது ஒன்றே ஒன்றுதான். வேலைக்குப் போகிறீர்கள். பணம் கொண்டு வந்து தருகிறீர்கள், அவ்வளவுதான். மற்ற அத்தனை வேலையும் என் தலையில்தான் விழுகிறது.''*

*சார்லஸ் ஒரு டாக்டர். வெற்றிகரமாக பிராக்டீஸ் பண்ணுகிறான். நிறைய வருமானம் வருகிறது. அந்த மாதிரி டாக்டர்கள் இருபத்து நாலு மணி நேரமும் தொழிலிலேயே மூழ்கியிருப்பார்கள். சார்லஸூம் அப்படித்தான். 'நன்றாய்ச் சம்பாதிக்கிறோம். மனைவிக் கும், குடும்பத்திற்கும் எல்லா வசதிகளும் செய்து கொடுத்திருக்கிறோம். அப்படியிருந்தும் மனைவி ஏன் சந்தோஷமாயில்லை?' என்று அவனுக்குப் புரியவில்லை. வீட்டுக்கு வரும்போதெல்லாம் பமீளமா ஏன் முகத்தை*

முழ நீளம் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறாள் என்று திகைக்கிறான்.

சார்லஸைப் பொறுத்தமட்டில், தொழிலில் நிறையச் சம்பாதிக்கச் சம்பாதிக்க, வீட்டில் மனைவியைத் திருப்திப் படுத்த வேண்டிய கடமை குறையும் என்று நினைப்பு. ஆஸ்பத்திரியில் வேலை பார்த்து, முதல் தேதியன்று மனைவியிடம் கணிசமான சம்பளத்தைக் கொண்டுவந்து தந்தபோது அதற்கே தனக்கு முப்பது மார்க் போட்டுக் கொண்டான். இப்போது சொந்தமாகக் கிளினிக் தொடங்கி, இரண்டு மடங்கு பணம் கொண்டுவந்து தந்ததும், அறுபது மார்க் போட்டுக் கொள்கிறான். ஆனால், எவ்வளவு பணம் சம்பாதித்தாலும், பமீளா அவனுக்கு பத்து மார்க்தான் போடுகிறாள் என்பதை அவன் உணரவில்லை.

பமீளாவின் கண்ணோட்டத்தின்படி, அவன் அதிகம் சம்பாதித்தால் அவள் அதிகம் இழக்கிறாள். சொந்தக் கிளினிக் தொடங்கியபின் சார்லஸ் தன் சக்தியையும், நேரத்தையும் அதிகமாக அதிலே செலவழிக்கிறான். அந்த அளவுக்குப் பமீளா தன் சக்தியையும், நேரத்தையும் குடும்பத்துக்காகச் செலவழிக்க வேண்டியிருக்கிறது. ஆகவே அவள் தனக்கு அறுபது மார்க் போட்டுக் கொள்கிறாள்.

என் ஆலோசனையைக் கேட்ட பிறகு சார்லஸ் தன் போக்கு தவறானது என்பதைப் புரிந்துகொண்டான். ஒரு மனைவிக்கு சின்ன விஷயங்கள்தான் முக்கிய மானவை என்பதை அறிந்துகொண்டான். அதிக நேரம் வேலை செய்து, அதிகப் பணம் சம்பாதிப்பதால் ஒரு மனைவி மகிழ்ச்சி அடைந்துவிட மாட்டாள் என்பதை

யும், தனிப்பட்ட முறையில் அக்கறை, பரிவு, அன்பு முதலியனதான் அவளுக்குச் சந்தோஷம் தரும் என்பதையும் உணர்ந்து கொண்டான்.

கிட்டத்தட்ட விவாகரத்துக்குப் போகும் அளவுக்கு முற்றியிருந்த பூசல் மறைந்து, அவர்களுடைய இல்லறத்தில் மகிழ்ச்சி மலரத் தொடங்கியது.

அதிகம் மெனக்கெடாமலே மனைவியைச் சந்தோஷப் படுத்த முடியும். தங்கள் நடத்தையைக் கொஞ்சம் திசை திருப்பிக்கொண்டால் போதும். பிரச்சினைகள் தீர்ந்து விடும். என்னென்ன செய்தால் மனைவி சந்தோஷப் படுவாள் என்பது நூற்றுக்குத் தொண்ணூறு கணவன் மார்களுக்குத் தெரியும். ஆனால் அதெல்லாம் அற்பமான விஷயங்கள் என்று நினைக்கிறார்கள். அவை ஒன்றும் முக்கியமல்ல என்று அலட்சியப்படுத்துகிறீர்கள்.

அவை அற்பமானவை அல்ல; ரொம்ப முக்கிய மானவை. இல்லறத்தைத் தாங்கிப் பிடிக்கும் தூண்கள், அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்-





# 11

## உதாரணம் 40

மனைவியின் பிரியத்தைச் சம்பாதித்துக்கொள்ள டஜன் கணக்கான வழிகள் இருக்கின்றன. எல்லாமே சின்னச் சின்னவை தான். உதாரணத்துக்குச் சில:

1. ஆபீசிலிருந்து வீடு திரும்பியதும் நேரே மனைவி எங்கே இருக்கிறாள் என்று போய்ப் பாருங்கள். அன்புடன் அணைத்துக் கொள்ளுங்கள்.

2. அவளுடைய அன்றைய பொழுது எப்படி என்று - பொதுப்படையாகக் கேட்காமல் - குறிப்பாக, ஏதாவதொரு விஷயத்தைப்பற்றி விசாரியுங்கள். ('டாக்டரிடம் போய் வந்தாயா?' 'அக்காவுக்கு லெட்டர் போட வேண்டுமென்று சொன்னாயே, போட்டாயா?')

3. மனைவி சொல்வதைக் காது கொடுத்துக் கேட்கவும், தொடர்ந்து அதுபற்றியே கேள்விகள் கேட்கவும் பழக்கப் படுத்திக் கொள்ளுங்கள்.

4. அவளுடைய பிரச்சினைகளைத் தீர்த்து வைக்க உடனே வழி சொல்லலாமென்று துடிப்பு ஏற்படும். அந்தத் துடிப்பை அடக்கிக் கொள்ளுங்கள். அதற்குப் பதில் அவள் நிலைமையில் உங்களை வைத்துப் பாருங்கள்.

*5. மனப்பூர்வமாக, முழுமையாக இருபது நிமிட நேரம் அவளிடம் கவனம் செலுத்துங்கள். அந்த நேரத்தில் பேப்பர் படிக்காதீர்கள். வேறு எந்த வேலையிலும் ஈடுபடாதீர்கள்.*

*6. விசேஷ நாட்களில் பூ வாங்கி வருவது இருக்கவே இருக்கிறது. அதைத் தவிர, வேறு நாட்களிலும் திடீர் திடீரென்று பூ வாங்கி வந்து கொஞ்சம் அவளை ஆச்சரியப்படுத்துங்கள்.*

*7. ஞாயிறன்று எங்கே வெளியே போகலாம் என்பதை சனிக்கிழமை இரவோ, ஞாயிறு காலையிலோ யோசனை செய்யாமல் முந்தின வாரமே பேசி முடிவு செய்யுங்கள்.*

*8. மனைவி களைப்பாக இருந்தாலோ, வேறு வேலைகளில் பிஸியாக இருந்தாலோ சமையல் பொறுப்பை நீங்கள் கவனியுங்கள்.*

*9. அவள் அணிந்துள்ள டிரெஸ்ஸைப் பாராட்டுங்கள். அலங்காரத்தைப் புகழுங்கள்.*

*10. அவள் வருத்தமாகவோ, கோபமாகவோ, இருக்கும் போது அந்த உணர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுங்கள்.*

*11. அவள் களைப்பாக இருந்தால், 'நான் ஏதாவது செய்யட்டுமா?' என்று கேளுங்கள், செய்யுங்கள்.*

*12. இருவருமாக வெளியூர் செல்வதாக இருந்தால், அதற்கான ஆயத்தங்களைச் செய்ய மனைவிக்கு உரிய அவகாசம் கொடுங்கள். அவசரப்படுத்தாதீர்கள், விரட்டாதீர்கள்.*

*13. வீடு திரும்ப லேட்டாகுமானால் அவளுக்கு ஃபோன் பண்ணித் தெரிவியுங்கள். அல்லது அக்கம்*

பக்கத்தில் தெரிந்தவர்களுக்குப் போன் இருந்தால் அவர்கள் மூலமாவது தெரியப்படுத்துங்கள்.

14. அவளுக்கு மனவருத்தம் ஏற்பட்டிருந்தால், 'உனக்கு வருத்தம் ஏற்படுத்திவிட்டேன். ஸாரி' என்று சொல்லுங்கள். சொல்லிவிட்டுச் சிறிது நேரம் மௌனமாக இருங்கள். நீங்கள் உண்மையிலேயே 'ஸாரி' சொல்லி யிருக்கிறீர்கள் என்பது அவளுக்குப் புரியட்டும். அவள் வருத்தப்பட்டதற்கு நீங்கள் காரணமில்லை என்று விளக்கிக் கொண்டிருக்காதீர்கள்.

15. அவள் பேசும்போது கையில் உள்ள பத்திரிகையைக் கீழே வையுங்கள். டி.வி.யை நிறுத்துங்கள்.

16. சமையலறையில் பாத்திரங்களைக் கழுவி வைப்பதை அவள் தினசரி வேலையாக வைத்துக் கொண்டிருந்தாலும், நடு நடுவே நீங்களும் அதைச் செய்யுங்கள். குறிப்பாக, அவள் களைப்பாக இருப்பது போல் தோன்றினால் கட்டாயம் செய்யுங்கள்.

17. வெளியே போகும்போது 'ஏதாவது வாங்கி வர வேண்டுமா?' என்று கேளுங்கள். மறக்காமல் அதை வாங்கி வந்து கொடுங்கள்.

18. வெளியே போவதாக இருந்தாலும் சரி, அல்லது கொஞ்சம் நேரம் தூங்குவதாக இருந்தாலும் சரி, முன்னதாகவே அவளிடம் சொல்லுங்கள்.

19. தினம் நாலு தடவை அவளை அணைத்துக் கொள்ளுங்கள்.

20. ஆபீசில் ஏதாவது குறிப்பிடும்படியான விஷயம் நடந்திருந்தால் அவளுக்குப் ஃபோன் செய்து சொல் லுங்கள்.

*21.* படுக்கையைத் தட்டிப் போடுங்கள். படுக்கை யறையைச் சுத்தம் செய்யுங்கள்.

*22.* உங்கள் துணிமணிகளை அவள் துவைத்திருந்தால் அவற்றை உதறி உலர்த்தும் வேலையை நீங்கள் செய் யுங்கள்.

*23.* குப்பைக்கூடை நிரம்பி இருந்தால் வெளியே எடுத்துப் போய்க் கொட்டுங்கள்.

*24.* வெளியூர் செல்லும்போது, அங்கே தங்கப்போகும் விலாசம், டெலிபோன் இருந்தால் அதன் எண் முதலிய வற்றைக் குறித்துக் கொடுத்துவிட்டுச் செல்லுங்கள். ஊருக்குப் போனதும் பத்திரமாகப் போய்ச் சேர்ந்துவிட்ட தகவலை அவளுக்குத் தெரியப் படுத்துங்கள்.

*25.* டூவீலரிலோ, காரிலோ அவளுடன் வெளியே செல் வதாக இருந்தால், வாகனத்தைச் சுத்தப்படுத்துங்கள்.

*26.* யாரிடமாவது மனைவி கோபமாக இருந்தால் நீங்கள் மனைவியின் கட்சியை ஆதரியுங்கள்.

*27.* உடம்பு வலி என்று சொன்னால் அவள் கழுத் தையோ - காலையோ - முதுகையோ பிடித்து விடுங்கள். (அல்லது மூன்றையும்)

*28.* அவள் யாருடனாவது பேசிக்கொண்டிருந்தால் அடிக்கடி கைக் கடியாரத்தைப் பார்க்காதீர்கள்.

*29.* உங்களுடன் அவள் டி.வி. பார்த்துக் கொண்டி ருக்கும்போது உங்கள் இஷ்டப்படி கன்னாபின்னா வென்று சேனலை மாற்றிக்கொண்டு இருக்காதீர்கள்.

*30.* அவளிடம் உங்களுக்குப் பிரியம் இருப்பதை நாலு பேர் எதிரில் காட்டிக் கொள்ளுங்கள்.

31. காப்பியோ, டீயோ, குளிர்பானமோ அவளுக்கு எது பிடிக்கும் என்பதைத் தெரிந்து வைத்துக்கொண்டு அதையே வாங்குங்கள்.

32. ஓட்டலுக்குச் சாப்பிடச் செல்லும் வழக்கம் உண்டென்றால் நல்ல ஓட்டல்கள் எங்கெங்கே இருக்கின்றன என்பதைத் தெரிந்து வைத்துக்கொண்டு, ஒவ்வொரு தடவை ஒவ்வோர் ஓட்டலுக்கே அழைத்துப் போங்கள். ஒரே ஓட்டலுக்கு கூட்டிப் போய் போராடிக்காதீர்கள்.

33. அவளுக்குப் பிடித்த சினிமா, நாடகம், நடனம், இசை நிகழ்ச்சி ஆகியவற்றுக்கு டிக்கெட் வாங்குங்கள் - முன்கூட்டியே.

34. அவள் புறப்படத் தாமதமானாலோ, கடைசி நிமிடத்தில் உடையை மாற்றிக்கொள்ள நினைத்தாலோ பொறுமை இழக்காதீர்கள்.

35. குழந்தைகளின் முன்னிலையில் மனைவிக்கே மதிப்புக் கொடுங்கள். அம்மாதான் முக்கியமானவள், முதன்மையானவள் என்பதைக் குழந்தைகள் உணரும்படி நடந்துகொள்ளுங்கள்.

36. அவளுடன் கடைக்குப் போகும்போது பவுடர், சென்ட், சாக்லெட் என்று சின்னச் சின்ன பரிசுகளை வாங்கிக் கொடுங்கள்.

37. அவளுடைய காலணி, உடைகளின் சைஸைத் தெரிந்து வைத்துக்கொள்ளுங்கள். கடைக்குத் தனியே போகும்போது நீங்களாகவே வாங்க உபயோகமாக இருக்கும்.

*38.* காமெரா இருந்தால் முக்கியமான நாட்களில் அவளைப் படம் எடுங்கள்.

*39.* எப்போதும் உங்கள் பர்ஸில் அவள் போட்டோ இருக்கட்டும், அது அவளுக்குத் தெரியட்டும். ஏதோ ஒரு பழைய போட்டோவை வைத்துக்கொண்டிருக்காதீர்கள். அவ்வப்போது புதிய லேட்டஸ்ட் படம் வைத்துக் கொள்ளுங்கள்.

*40.* அவளுடைய பிறந்த நாள், திருமண நாள் ஆகியவற்றை நினைவில் வைத்துக்கொண்டு பரிசு வாங்கிக் கொடுங்கள்.

*41.* டூ வீலரிலோ, காரிலோ அழைத்துப்போனால் மெதுவாகவும், ஜாக்கிரதையாகவும் ஓட்டுங்கள். அவளுக்குப் படபடப்பு ஏற்படாதபடி வாகனத்தைச் செலுத்துங்கள்.





# 12

## மனைவி கோபமாக இருந்தால்...

மனைவியின் சந்தோஷப்படுத்தக்கூடிய சின்னச் சின்ன விஷயங்கள் மேலும் எவ்வளவோ இருக்கின்றன.

☐ மனைவியின் மனநிலை எப்படி இருக்கிறது என்பதைக் கவனியுங்கள். அதைக் குறிப்பிட்டுப் பேசுங்கள். அவள் மகிழ்ச்சியுடன் இருப்பதாகத் தோன்றினால், 'என்ன, இன்றைக்கு ஏகப்பட்ட குஷியில் இருக்கிறாய்?' என்று சொல்லுங்கள். களைப்பாக இருப்பதாகத் தோன்றினால், 'பாவம், களைப்பாக இருக்கிறாயே? ரொம்ப வேலையா இன்று?' என்று கேளுங்கள்.

☐ ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு அழைத்துச் செல்வதாக இருந்தால், அதற்கு எப்படிப் போவது, என்ன வழி என்பதை முன்கூட்டியே தெரிந்து வைத்துக் கொண்டு புறப்படுங்கள், வழிசொல்லும் பொறுப்பை அவள் தலையில் கட்டாதீர்கள்.

☐ அன்பாக இரண்டு வரியோ, ஒரு கவிதையோ எழுதி அவளை ஆச்சரியப்படுத்துங்கள்.

☐ திருமணமான புதிதில் எப்படி அவளிடம் நடந்து கொண்டீர்களோ அதேபோல் தொடர்ந்து இருங்கள்.

☐ ஓய்வு நேரம் கிடைத்தால், 'ஃப்ரீயாக இருக்கிறேன். ஏதாவது செய்ய வேண்டுமா சொல்லு' என்று கேட்டு, அதைச் செய்யுங்கள். ஆனால் உங்களால் முடியாத வேலையை இழுத்துப் போட்டுக்கொண்டு அவள் சலித்துப் பெருமூச்சு விடும்படி பண்ணாதீர்கள்.

☐ சமையலறையில் கத்தியோ, அரிவாள்மனையோ மொக்கையாக இருந்தால் சாணை பிடித்துக் கொடுங்கள்.

☐ ஏதேனும் உடைந்திருந்தால் உயர்ந்த ரக கோந்து வாங்கி ஒட்டிக் கொடுங்கள்.

☐ பல்ப் ஃப்யூசானால் உடனே புதிதாக வாங்கி மாட்டுங்கள்.

☐ அவளுக்குப் பிடித்தமான செய்தியோ, அல்லது கட்டுரை யோ பேப்பரில் வந்தால் அதை அவளுக்கு இரைந்து படித்துக் காட்டுங்கள். அல்லது அதை மடித்தோ, கத்தரித்தோ, அவளிடம் கொடுங்கள்.

☐ மனைவி வீட்டில் இல்லாதபோது அவளை யாரேனும் ஃபோனில் கூப்பிட்டால் அந்தத் தகவலைக் காகிதத்தில் குறித்து வையுங்கள்.

☐ குளித்த பிறகு பாத்ரூமில் தரையில் தண்ணீர் தேங்கி யிருந்தால் துடையுங்கள்.

☐ வெளியே போகும்போதும், திரும்பி வரும்போதும், காரில் ஏறும்போதும், இறங்கும்போதும் அவளுக்கு கதவைத் திறந்துவிடுங்கள்.

☐ கடைகண்ணிக்குப் போனால் சாமான்களை நீங்கள் தூக்கிக் கொள்ளுங்கள்.

☐ வெளியூர் கிளம்புவதானால் லக்கேஜ்களை நீங்கள் கட்டி வையுங்கள். திரும்பும்போது எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பாருங்கள்.

☐ குழாயிலோ, விளக்கிலோ, சாக்கடையிலோ, டி.வி.யிலோ, டூ இன் ஒன்னிலோ கோளாறுகள் இருந்தால் அதை குறித்து வைத்துக்கொண்டு, சரிப்படுத்துங்கள். அந்தக் கோளாறு நீடித்த காலம் இருக்கும்படி விடாதீர்கள்.

☐ அவள் சமையலைப் பாராட்டுங்கள்.

☐ அவள் பேசுவதைக் கேட்கும்போது அவளுடைய கண்களை நேருக்கு நேராகப் பார்த்துக் கேளுங்கள்.

☐ அவளுடன் பேசும்போது நடு நடுவே அவள் கையைத் தொட்டுப் பேசுங்கள்.

☐ யாரைப் பற்றியாவது அவள் சொல்லும்போது, தான் படித்த புத்தகத்தைப்பற்றி சொல்லும்போது அந்த விஷயத்தில் ஆர்வம் காட்டுங்கள்.

☐ அவள் பேசும்போது, அவள் பேச்சை நீங்கள் கேட்டுக்கொண்டிருக்கிறீர்கள் என்பது தெரியும் வண்ணம், 'அட, அப்படியா? ஓகோ, அப்புறம்' என்றெல்லாம் சொல்லுங்கள்.

☐ மனைவி உடல் நலமில்லாமல் இருந்தால் 'இப்போது எப்படி இருக்கிறது? தேவலையா?' என்று அவ்வப்போது கேளுங்கள்.

☐ நீங்கள் வெளியே போகும் போது அவளை முத்தமிட்டு, 'போய் வருகிறேன்' என்று கூறுங்கள்.

☐ அவள் ஜோக் சொன்னால், வேடிக்கையான விஷயம் சொன்னால், சிரியுங்கள்.

☐ அவள் உங்களுக்காக ஏதேனும் சொன்னால் 'தாங்க்யூ' என்று வாய்விட்டுச் சொல்லுங்கள்.

☐ மனைவியுடன் அந்தரங்கமாகப் பேசிக் கொண்டிருக்கும்போதும், மனைவி எரிச்சலாக இருக்கும் போதும், போன் மணி அடித்தால் எடுக்காதீர்கள்.

☐ சேர்ந்து 'வாக்' செல்லுங்கள் - குழந்தைகள் இல்லாமல், தனியாக.

☐ இயன்றபோது எங்காவது 'பிக்னிக்' அழைத்துப் போங்கள்.

☐ லாண்டரிக்குப் போடும் துணிமணிகளையும், லாண்டரியிலிருந்து வரும் துணிமணிகளையும் மனைவிக்கு உதவியாகக் கணக்குப் பாருங்கள்.

☐ வெளியூருக்கு நீங்கள் மட்டும் போய்விட்டுத் திரும்பினால் 'நீ இல்லையே என்றிருந்தது' என்று சொல்லுங்கள்.

☐ மனைவியுடன் வெளியூர்களுக்குச் சென்றால் வயிறு புடைக்கச் சாப்பிடாதீர்கள். நாலு இடங்களுக்கு அவளை அழைத்துப் போக முடியாமல் களைப்பு ஏற்பட்டுவிடும்.

☐ இதுவரை சொல்லியுள்ள பட்டியலை மனைவியிடம் காட்டுங்கள். ஏதும் விட்டுப் போயிருக்கிறதா என்று கேட்டு, அவள் சொல்வதைச் சேர்த்துக் கொள்ளுங்கள்.

மேற் குறிப்பிட்ட அற்பமான சின்னக் காரியங்கள் மாயா ஜாலம் மாதிரி வேலை செய்து, மனைவிக்கு மகிழ்ச்சியூட்டும்.

ஆனால் ஒன்று, கணவனாகட்டும், மனைவி யாகட்டும், வருத்தப்படும்போதும், ஏமாற்றடையும் போதும், கோபப்படும்போதும் அமைதியாக - பிரிய மாகப் பேசுவது அசாத்தியமான காரியம். அதுபோன்ற சந்தர்ப்பங்களில் பரஸ்பர நம்பிக்கை, பிரியம், மதிப்பு எல்லாம் காற்றிலே பறந்துவிடுகின்றன. நல்ல நோக்கத் துடன் பேச ஆரம்பித்து, சண்டையிலே முடிவதும் உண்டு.

வாய்ப் பேச்சினால் பயன் ஏற்படாது என்று தெரியும் போது, வேறொரு வழியைக் கடைப்பிடியுங்கள், கடிதம் எழுதுங்கள். ஆம், வீட்டுக்குள்ளேயே கடிதம்!

திருமணமான புதிதில், நான் வேலை வேலை என்று இருபத்து நாலு மணி நேரமும் வேலையிலேயே மூழ்கியிருந்தேன். கட்டுரைகள் எழுதுவது, புத்தகங்கள் வெளியிடுவது, லெக்சர் கூட்டங்களுக்குப் போவது, நேரில் வரும் தம்பதிகளுக்கு ஆலோசனைக் கூறுவது - இப்படியே இருந்தேன் என் மனைவி பான்னிக்குத் தன்னைக் கவனிக்கவில்லை என்று மனக்குறை. சொல்லிச்சொல்லிப் பார்த்தாள். நான் என் போக்கை மாற்றிக் கொள்ளவில்லை.

திடீரென்று ஒரு நாள் என் மேஜை மீது ஒரு கடிதம் இருந்தது. என் மனைவி எனக்கு எழுதியது!

அன்புள்ள ஜான்.

என் மனசிலிருப்பதை உங்களுடன் பகிர்ந்து கொள் ளவே இதை எழுதுகிறேன்.

நீங்கள் சதா நேரமும் வேலையிலேயே மூழ்கியிருப் பதைக் கண்டு எனக்கு ரொம்பக் கோபமாக இருக்கிறது.

எனக்காக நீங்கள் அதிக நேரம் ஒதுக்க வேண்டுமென்று நான் ஆசைப்படுகிறேன், முடியவில்லை.

என்னைக்காட்டிலும் உங்கள் 'க்ளையன்ட்'டுகள் தான் உங்களுக்கு முக்கியமாக இருக்கிறார்கள். அது என் மனசைப் புண்படுத்துகிறது. நீங்கள் களைத்துச் சலித்து வீட்டுக்கு வருவதைப் பார்க்கையில் வருத்தமும் ஏற்படுகிறது. 'நான் உங்களுக்கு ஒரு பாரமாக ஆகிவிட் டேனோ' என்று பயமாயிருக்கிறது.

உங்கள் அன்புள்ள
பான்னி

இந்தக் கடிதத்தைக் கண்ட பிறகுதான் என் தவறு எனக்குப் புரிந்தது. அவளிடம் மிகுந்த பிரியம் வைத் திருப்பதாக நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் அப்படி இல்லை என்று புரிந்தது. என் போக்கை மாற்றிக் கொண்டேன்.

இதன் பிறகு நாங்கள் அடிக்கடி இதுபோலக் கடிதம் எழுதிக் கொள்ளலானோம். எங்கள் இல்லறம் பலப் பட்டது. இந்தக் கடிதங்களுக்கு நாங்கள், 'காதல் கடிதம்' என்று பெயர் வைத்திருக்கிறோம்.

இந்த முறையை நீங்களும் கடைப்பிடிக்கலாம். எப்படி?





# 13

## இதோ ஓர் ஐந்து அம்சத் திட்டம்!

கோபம் வரும்போது எல்லாம் மறந்துவிடுகிறது. ஒருவர் மீது மற்றவருக்குக் கொள்ளைப்பிரியம் உண்டு என்ற போதிலும், வெறும் பேச்சிலே ஆரம்பித்துப் பெரும் சண்டையில் போய் முடிகிறது.

அம்மாதிரி சமயங்களில் ஒரு மனைவி தன்னையும் அறியாமல் கணவன் மீது குற்றம் சாட்டுகிறாள். எல்லாத் தப்புக்கும் அவன்தான் காரணம் என்று எண்ணுகிறாள். நம்பிக்கைக் குறைகிறது. விசுவாசம் குறைகிறது. கணவனின் மனம் எவ்வளவு புண்படும் என்பதே மறந்து விடுகிறது.

கணவனின் நிலையும் அப்படித்தான். கோபம் வரும் போது மனைவியின் உணர்ச்சிகளை மதிக்க மறுக்கிறான். அவள் தனக்காகச் செய்வதையெல்லாம் மறக்கிறான். அவள் ஆதரவில்லாத பேதை என்பதை மறக்கிறான். அவள் மீது அன்பும், அக்கறையும் காட்டுவது கிடையாது. இந்த நிலையில் கணவனும், மனைவியும் ஒருவருக் கொருவர் கடிதம் எழுதிக் கொள்வதே சிறந்த வழியாகும். அப்படி எழுதுவதன் மூலம், மற்றவரின் மனசை நோகடிக்காமல் உங்கள் உணர்ச்சிகளை வெளிப்படுத்த முடியும். அது மட்டுமல்ல; மனம் விட்டு எழுதும்போது உங்கள் உணர்ச்சிகள் என்னவென்று உங்களுக்கே புரியும். தானாகவே உங்கள் உள்ளத்தில் பரிவும், பிரியமும் பிறக்கும். நீங்கள் கணவனாக இருந்தால் மனைவியிடம் மதிப்பு ஏற்பட்டு, அவள் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்வீர்கள். மனைவியாக இருந்தால், கடிதம் எழுதும் போதே கணவனிடம் நம்பிக்கை உதிக்கும், அவன் உங்களுக்காகச் செய்யும் உதவிகளைப் பாராட்டத் தோன்றும்.

இருவருக்குமே, கடிதம் எழுத எழுத கோபத்தின் உக்கிரம் வெளியேறிவிடும். எதிர்மறையான எண்ணங் கள் மறைந்து, ஆக்கபூர்வமான சிந்தனைகள் பிறக்கும். கடிதம் எழுதி முடித்த பிறகு உங்களுக்குள் ஒரு சந்தோஷம் ஏற்பட்டு, கணவனுக்குப் பிரியமான - அல்லது மனைவியை மகிழ்ச்சிப்படுத்தக்கூடிய ஒரு காரியம் செய்யத் தோன்றும்.

பேனாவும், பேப்பரும் எடுத்து வைத்துக்கொண்டு எழுதுவதற்குச் சோம்பலாக இருக்கிறதா?

பரவாயில்லை. கடிதத்தில்தான் எழுத வேண்டும் என்பதில்லை. பேசுவதை நிறுத்திக்கொண்டு, தனியே போய் உட்கார்ந்துகொண்டு, என்ன எழுத நினைத்தீர்களோ அதை மனசுக்குள் எழுதுங்கள். எதனால் சண்டை வந்தது, என்ன நடந்தது? என்பதைப் புரட்டிப் புரட்டி யோசனை செய்யுங்கள். நீங்கள் என்ன உணர்கிறீர்கள், என்ன நினைக்கிறீர்கள், என்ன வேண்டும் என்று விரும்புகிறீர்கள் என்பதைத் தாராளமாகச் சிந்தனை செய்யுங்கள். எண்ணங்களைப் பாதியில் வெட்டாமல் முழுவதும் ஓடவிடுங்கள். உங்களுக்குள் நீங்களே ஒரு சம்பாஷணை நடத்திக் கொள்ளுங்கள்.

திடீரென்று உங்கள் உணர்ச்சிகளைப் பற்றி உங்களுக்குள்ளேயே ஒரு தெளிவு ஏற்படும். மனசின் இறுக்கம் தளரும்.

காகிதத்தில் எழுதினாலும் சரி, மனசுக்குள் எழுதிக் கொண்டாலும் சரி, இதன் பெயர் 'காதல் கடித டெக்னிக்'. உங்கள் மனோ சக்தியை வளர்க்கும். இந்தக் 'காதல் கடித முறை'யில் நீங்கள் கடைப்பிடிக்க வேண்டிய முக்கிய அம்சங்கள்:

1. மனைவியிடம் (அல்லது கணவனிடம்) நேரில் பேசுவதாக நினைத்துக் கொள்ளுங்கள். அவர் நீங்கள் பேசுவதை மனப்பூர்வமான அக்கறையுடன் கேட்டுக் கொண்டிருக்கிறார் என்று எண்ணிக் கொள்ளுங்கள்.

2. முதலில் உங்கள் கோபத்தைத் தெரிவியுங்கள். அடுத்து உங்கள் மனக்கஷ்டத்தைச் சொல்லுங்கள். பிறகு உங்கள் பயத்தைக் கூறுங்கள். அதன் பின், நடந்த விஷயத்திற்கு உங்கள் வருத்தத்தைத் தெரியப்படுத்துங்கள். கடைசியாக உங்கள் பிரியத்தை வெளிப்

படுத்துங்கள். உங்கள் கடிதத்தில் இந்த ஐந்து அம்சங்களும் இடம் பெற வேண்டும்.

3. ஒவ்வோர் உணர்ச்சியையும் பற்றிச் சில வரிகள் எழுதுங்கள். ஒன்று நீளமாயும், ஒன்று சுருக்கமாயும் இல்லாமல் எல்லாவற்றையும் சீராக அமையுங்கள். எளிமையான நடையைக் கையாளுங்கள்.

4. ஒவ்வோர் உணர்ச்சி முடிந்ததும் சற்று நிறுத்தி யோசனை செய்து, அடுத்த உணர்ச்சியைப் பற்றிச் சிந்தனை செய்யுங்கள். பின்னர் அதை எழுதுங்கள்.

5. உங்கள் அன்பையும், பிரியத்தையும் சொல்லும் கடைசிப் பகுதி வருகிற வரையில் கடிதத்தை நிறுத் தாதீர்கள். பொறுமையாகக் காத்திருங்கள். உங்கள் மனதில் பிரியம் நிறைந்து பொங்கட்டும். அதன் பிறகு அந்தக் கடைசிப் பகுதியை எழுதுங்கள்.

6. கடிதத்தை முடித்துக் கையெழுத்துப் போட்டபின் சில நிமிடம் யோசனை செய்யுங்கள். உங்கள் தேவை அல்லது விருப்பம் என்னவென்று ஞாபகம் வருமானால் ‘பின் குறிப்பு’ என்று குறிப்பிட்டு அதையும் எழுதுங்கள்.

உதாரணத்திற்கு ஒரு கடிதம் பார்ப்போம் :

டாம் அன்று அதிக நேரம் தூங்கிவிட்டான். குழந்தை ஹெய்லியைப் பல் டாக்டரிடம் அன்று அழைத்துச் செல்ல வேண்டும். மறந்துவிட்டான். அவன் மனைவி சமந்தா வுக்குக் கடும் கோபம். ஆனால் கணவனிடம் நேருக்கு நேர் போய் மோதாமல், தன் உணர்ச்சிகளை நான் சொன்னது போல வரிசைப்படுத்தி எழுதுகிறாள்.

அன்புள்ள டாம்,

1. கோபம் : நீங்கள் இப்படி மறந்து போனதில் எனக்கு ரொம்பக் கோபமாயிருக்கிறது. இப்படியா தூங்குவீர்கள்? தூங்கினதால் பல விஷயங்களை மறந்து போகிறீர்கள். கடைசியில் நான்தான் பொறுப்பு என்றாகிறது. எதையெடுத்தாலும் நானே செய்ய வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்ப்பதை எண்ணி வெறுப்பு ஏற்படுகிறது.

2. மனக் கஷ்டம் : குழந்தை ஹெய்லியைப் பல் டாக்டரிடம் நீங்கள் அழைத்துப் போகாதது பற்றி மனசுக்குக் கஷ்டமாக இருக்கிறது. குடும்பத்தில் உங்களுக்கு அக்கறை இல்லை என்று எண்ணி வருத்தப் படுகிறேன்.

3. பயம் : போகப்போக எல்லாவற்றையும் நானேதான் செய்யவேண்டியிருக்குமோ என்று பயமாயிருக்கிறது. அதுமட்டுமல்ல; நீங்கள் ரொம்ப அதிகமாக வேலை செய்வதால் உங்கள் உடம்புக்கு ஏதாவது வந்துவிடப் போகிறதோ என்று பயப்படுகிறேன். உங்கள் உதவி எனக்கு நிறைய தேவை. அது கிடைக்காமல் போய் விடுமோ என்று பயமாயிருக்கிறது.

4. இப்படியெல்லாம் உங்களை விரட்டி வேலை வாங்க வேண்டி இருக்கிறதே என்று எனக்கு வருத்தம் ஏற்படுகிறது. உங்களைப் புரிந்துகொண்டு, அன்பாக நடந்து கொள்ளவில்லை என்று வருத்தப்படுகிறேன்.

5. அன்பு : உங்களுக்கு வேலை ஜாஸ்தி. அதனால்தான் டாக்டர் வீட்டுக்குப் போக வேண்டும் என்பதை மறந்து தூங்கிவிட்டீர்கள். குடும்பத்திற்காக இவ்வளவு வேலை செய்கிறீர்களே என்பதை எண்ணி எண்ணி எனக்கு உங்கள்

மீது பிரியம் அதிகரிக்கிறது. டாக்டரிடம் வேறொரு நாள் அப்பாயின்ட்மென்ட் வாங்கிக்கொள்ளலாம். நீங்கள் எனக்குத் துணைவராகக் கிடைத்தது என் அதிர்ஷ்டம். இன்று சாயந்தரம் இரண்டு பேரும் எங்காவது வெளியே போய்விட்டு வருவோம்.

அன்புடன்
சமந்தா.

பரஸ்பரம் அன்பை வளர்த்துக்கொள்ள இன்னொரு வழி இருக்கிறது —







# 14

## சனிக்கிழமை சண்டை - ஞாயிற்றுக்கிழமை சல்லாபம்

கணவனின் ஆதரவு அல்லது உதவி தேவைப்படும் போது மனைவி இரண்டு விஷயங்களை ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும். ஒன்று, கேட்பதைச் சுற்றி வளைக்காமல் நேரடியாகக் கேட்பது; இரண்டு, நீளமாகச் சொல்லிக்கொண்டு போகாமல் நறுக்கென்று இரண் டொரு வார்த்தையில் கேட்பது.

உதாரணமாக-

''சமையலறை ஒரே களேபரமாக இருக்கிறது. இந்தக் குப்பைக் கூடையைப் பாருங்கள், நிரம்பி வழிகிறது. இதற்கு மேல் என்ன கொட்ட முடியும்? இதை வெளியே எடுத்துப்போய் காலி பண்ணிக்கொண்டு வாருங்கள்''

என்று சொல்லாதீர்கள். அதற்குப் பதில் 'குப்பைக் கூடையை எடுத்துப்போய்க் காலி பண்ணிக்கொண்டு வாருங்கள்'' என்று சொல்லுங்கள்.

''நாலு பேர் வருகிற நேரம், இந்த மேஜையை நகர்த்தி அந்தக் கோடியில் கொண்டுபோய் வைக்க வேண்டும். என் ஒருத்தியால் எப்படி முடியும்? நீங்களும் வந்து பிடியுங்கள்'' என்று சொல்லாதீர்கள். பதிலாக, 'இந்த மேஜையைக் கொஞ்சம் பிடியுங்கள்' என்று சொல்லுங்கள்.

''கடையிலிருந்து வாங்கி வந்த மளிகை சாமான்களெல்லாம் வாசல் பக்கம் இருக்கிறது. அது வந்துதான் சமையல் ஆரம்பிக்கணும். எல்லாவற்றையும் உள்ளே எடுத்து வாருங்கள்,'' என்று சொல்வதற்குப் பதில், 'சாமான்களை உள்ளே எடுத்து வந்து வையுங்கள்' என்று சொல்லுங்கள்.

''சமையல் செய்ய வேண்டும். எனக்கு ஒரே களைப்பாக இருக்கிறது. நாமும் ஓட்டலுக்குப் போய்ச் சாப்பிட்டு ரொம்ப நாளாகிறது. இன்று போகலாமே? என்ன நினைக்கிறீர்கள்?'' என்று சொல்வதற்குப் பதில், 'இன்று ஓட்டலுக்கு சாப்பிட போகலாமா?' என்று கேளுங்கள்.

கணவனுக்கும் சேர்த்துத்தான் இந்தக் குறிப்பு. மனைவியிடம் நேரிடையாகவும், சுருக்கமாகவும் சொல்லுங்கள்.

கணவனுக்கும் மனைவிக்கும் இடையே பூசல்கள் எப்போது ஏற்படுகிறது என்பதைக் கவனித்தால் வேடிக்கையான விஷயமொன்று புலப்படும்.

எப்போதும் நாம் சந்தோஷமாக இருக்கிறோமோ அப்போது பார்த்து சண்டை மூள்வதைக் கவனித்திருப்பீர்கள்.

புது வீட்டுக்குப் போகும்போது, வீட்டுக்கு வெள்ளை யடித்து அலங்காரம் செய்யும்போது, ஒரு கல்யாணத் துக்குப் போயிருக்கும்போது, ஒரு பண்டிகை கொண் டாடும்போது, ஓர் உல்லாசப் பயணம் செல்லும் போது காரோ, ஸ்கூட்டரோ வாங்கியிருக்கும்போது - இம்மாதிரி சந்தர்ப்பங்களில்தான் சண்டைகள் வருகின்றன.

அதற்குக் காரணம் அன்று நடந்த எந்த நிகழ்ச்சியாகவும் இருக்காது. பல நாட்களாக மனசுக்குள் புதைந்து கிடக்கும் ஒரு பழைய விஷயம் காரணமாக இருக்கும்.

சில மாதங்களுக்கு முன்பு, என் மனைவி பான்னியோடு குஷியாகச் சல்லாபித்துக் கொண்டிருக்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அவளிடம் நெருங்கியபோது புர் புர் என்று இருந்தாள். மறுநாளும் அப்படியே. அதற்குப் பிறகும் அதே போல், ஒரு வாரம், பத்து நாள் அதே போல் இருந்தாள். ஒரு நாள் புத்தம் புது டிரெஸ் வாங்கிக் கொண்டுவந்து தந்தேன். அப்போதுகூட ஏதோ சந்தோஷப் பட்ட மாதிரி தோன்றியதே தவிர, நல்ல மூடில் இல்லை. எப்படியோ தொலையட்டும் என்று விட்டுவிட்டு, என் வேலைகளில் மூழ்கிவிட்டேன்.

மூன்றாம் வாரம், ஒரு நாள் நான் வீட்டுக்கு வந்த போது, வீடெங்கும் இனிய மணம் நிரம்பி இருந்தது. ருசியான உணவு வகைகளும், பழங்களும் சாப்பாட்டு மேஜை மீது இருந்தன. பூச்சாடியில் பூக்கள் குலுங்கின. ஸ்டீரியோவில் மெல்லிய இசை மிதந்துகொண்டிருந்தது. பான்னி கவர்ச்சி யான உடையில் இனிமையாக இருந்தாள்.

ஒரு காரணமும் இல்லை. அவள் மனசில் ஏதோ மாறுதல் - நல்ல மூடு வந்துவிட்டது.

உடனே நான் சந்தோஷப்பட்டிருப்பேன் என்று தானே நினைக்கிறீர்கள்? அதுதான் இல்லை. 'உனக்குக் குஷியான மூடு வந்தால் நானும் குஷியான மூடில் இருக்க வேண்டுமா என்ன? மாட்டேன். நீ பதினைந்து நாள் எப்படி இருந்தாயோ அதே போல நான் பதினைந்து நாள் இருக்கிறேன் பார்!' என்று கறுவிக்கொண்டு, புர் புர் என்றே பல நாள் வரை இருந்தேன். இரண்டு வாரமாக என்னுள் அடக்கி வைத்திருந்த கோப உணர்ச்சிதான் மேலோங்கியது.

என்னிடம் ஆலோசனை கேட்க வரும் பல தம்பதியரிடம் இந்தப் போக்கைக் கண்டிருக்கிறேன்.

மேரி ஏதோ ஒரு பொருளைக் கேட்டுக்கொண்டிருப்பாள். இவன் பேசாமலே இருப்பான். கடைசியில் ஒரு நாள் அவன் வாங்கி வந்து தரும்போது மேரி அதைப் பாராட்டமாட்டாள். 'டூ லேட்' என்பாள். அல்லது உதட்டைச் சுளித்துக் கழுத்தை நொடித்துக்கொண்டு போய்விடுவாள்.

இருபது, இருபத்தைந்து வருடம் ஒற்றுமையாகக் குடும்பம் நடத்தி வந்த தம்பதியருக்கும் இப்படிப்பட்ட பிரச்சினைகள் வருவதுண்டு.

குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாகி, திருமணம், வேலை என்று புறப்பட்டுப்போன பின்னர் கணவனுக்கு மனைவி மீது ஒரு புதிய பிரியம் பிறக்கும். 'இருபது வருடமாக இவளைக் கவனிக்காமல் இருந்துவிட்டோமே! இனி இவள் மீது பாசத்தைப் பொழிந்து பிரியத்தைக் கொட்ட வேண்டும்!' என்று தீர்மானித்து, தன் வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்ள முயல்வான்.

ஆனால் மனைவியின் மனோபாவத்தில் வேறொரு மாறுதல் ஏற்பட்டிருக்கும். 'இருபது வருடம் என்னை வாட்டி வதைத்தீர்கள். அடுத்த இருபது வருடத்துக்கு நான் உங்களை வதைக்கிறேன்' என்று மனத்துக்குள் தீர்மானம் செய்துகொள்வாள். ஆனால், அதிர்ஷ்டவசமாக இது விவாகரத்து செய்துகொள்ளும் அளவுக்கு முற்றுவதில்லை. கொஞ்சம் கொஞ்சமாக மனைவி அவனுடைய பரிவையும், பாசத்தையும் புரிந்துகொண்டு ஒற்றுமையாக வாழத் தொடங்குவாள்.

இந்நூலில் நான் கூறியுள்ள ஆலோசனைகளை ஆயிரக் கணக்கான தம்பதியருக்குச் சொல்லி வந்திருக்கிறேன். சில சமயம் ஒரே நாளில்கூட அவர்களுக்குள் ஒற்றுமை ஏற்பட்டதுண்டு. சனிக்கிழமை பிற்பகல் பெரும் சண்டையுடன் வருவார்கள். ஞாயிற்றுக்கிழமை மாலை காதல் தடாகத்தில் நீந்திக் கொண்டிருப்பார்கள்.

அடுத்த முறை மனைவிக்குக் கணவன் மீதோ, கணவனுக்கு மனைவி மீதோ கோபம் வரும்போது நான் ஆரம்பத்தில் சொன்னதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். ''ஆண்கள் செவ்வாய்க் கிரகத்திலிருந்து வந்தவர்கள். பெண்கள் வெள்ளிக் கிரகத்திலிருந்து வந்தவர்கள். அப்படிக் கற்பனை செய்துகொண்டால் இருவரும் வெவ்வேறான, தனித் தனியான குணாதிசயம்'' சுபாவம் உள்ளவர்கள் என்பது புரியும், தப்பபிப்ராயங்கள் நீங்கி, பரஸ்பரம் அன்பும், பரிவும் பிறக்கும்.

உங்கள் வாழ்க்கையில் வெள்ளமாக அன்பு பாயட்டும், பிரியம் ஒளி வீசட்டும்.

வாழ்க வளமுடன்!



## நீங்கள் அவசியம்
## படிக்க வேண்டிய நூல்கள்

